REGD. No. M. [illegible]

# ஆனந்த போதினி

# ANANDA BODHINI

Vol. 28. பொருளடக்கம். No. 11.

சுபானு௵ வைகாசி௴ கஉ



உள்ளடக்கம். பக்கம்.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."—திருவள்ளுவர்.



| தொகுதி 28 | சுபானு ஹூ வைகாசிமீ கஉ 1943ஹூ மேமீ 15உ | பகுதி 11 |
|---|---|---|

## கடவுள் வணக்கம்.

புவனநா யகனே! அகஉயிர்க்(கு) அமுதே!
பூரணா! வாரணம் பொழியும்
பவளவாய் மணியே! பணிசெய்வார்க்(கு) இரங்கும்
பசுபதீ! பன்னகா பரணா!
அவனிஞா யிறுபோன்(று) அருள்புரிந்து அடியேன்
அகத்திலு(ம்) முகத்தலை மூதூர்த்
தவளமா மணிப்பூங் கோயிலும் அமர்ந்தாய்;
தனியனேன் தனிமைநீங் குதற்கே. (1)

புழுங்குதீ வினையேன் வினைகெடப் புகுந்து
புணர்பொருள் உணர்வுநூல் வகையால்
வழங்குதேன் பொழியும் பவளவாய் முக்கண்
வளரொளி மணிநெடுங் குன்றே!
முழங்குதீம் புனல்பாய்ந்து இளவரால் உகளும்
முகத்தலை அகத்துஅமர்ந்து அடியேன்
விழுங்குதீங் கனியாய் இனிய ஆனந்த
வெள்ளமாய் உள்ளமா யினையே. (2)

கன்னெகா உள்ளக் கள்வனேன் நின்கண்
கசிவிலேன் கண்ணினீர் சொரியேன்
முன்னகா ஒழியேன் ஆயினுஞ் செழுநீர்
முகத்தலை அகத்துஅமர்ந்து உறையும்
பன்னகா பரணா! பவள்வாய் மணியே!
பாவியேன் ஆவியுள் புகுந்த(து)
என்னகா ரண(ம்)? நீ ஏழைநா யடியேற்(கு)
எளிமையோ பெருமையா அதுவே. (3)




# கல்வி வளர்ச்சியே நலந் தரும்



உலகில் நிகழ்ந்து வரும் குழப்பம், கலகம், சண்டை, சச்சரவு, பெரும் போர் முதலியவைகளுக்கெல்லாம் மக்களிடையே யுள்ள அறியாமையே அடிப்படையான காரண மாகும். அறியாமை இருள் அறவே நீக்கப்பட்டு அறிவுச் சூரியன் பிரகாசிப்பானால், மேற்குறித்த பீடைகள் அனைத்தும் இருக்கும் இடந் தெரியாமல் மறைந்து விடும். மக்களை அலக்கழிக்கும் அறியாமையைப் போக்கி அறிவொளி யுண்டாக்குவதற்குப் பேருதவியாக இருப்பது கல்வி யாகும். இக்கல்வி முறை கால தேச வர்த்தமானத்துக்குத் தகுந்தபடி பலவிதமாக அமைக்கப்பட் டிருக்கிறது. நம் நாட்டுக் கல்வி முறை மக்களின் அறியாமையை முற்றும் போக்கத்தக்க விதமாக இல்லை. ஆகவே தான், பேரறிஞர்கள் நம் நாட்டுக் கல்வி முறை மக்கள் இயற்கைக்கு ஏற்றவிதமாக மாற்றி யமைக்கப் படவேண்டும் என்று வற்புறுத்தி வருகின்றனர். அதுவும், யுத்த நெருக்கடி மிகுந்துள்ள இக்காலத்தில், கல்வி வளர்ச்சி இன்றியமையாத தாகும். அதனால்தான், உலகிலுள்ள பேரறிஞர்கள் எல்லோரும் யுத்தத்தைக் காரணமாகக் காட்டிக் கல்வி யபிவிருத்தியில் அசிரத்தை காட்டக்கூடாது என்றும், யுத்தத்திற்குப் பிறகு கல்வியை இன்னின்ன விதமாகத் திருத்தி யமைக்க வேண்டுமென்றும் வற்புறுத்தி வருகிறார்கள்.

இப்போது நடைபெற்று வரும் மகா யுத்தத்தில் நேரடியாகச் சம்பந்தப்பட்டுள்ள இங்கிலாந்து முதலிய தேசங்களில் கூட கல்வி வளர்ச்சிக்கு ஒரு சிறிதும் பாதகம் ஏற்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. அப்படி யிருக்க, நம் நாட்டில் மட்டும் சர்க்கார் கல்வி வளர்ச்சி விஷயத்தில் போதிய சிரத்தை காட்டாததற்கு காரணமென்ன? சர்க்கார் யுத்தத்தின் மீது பழியைப் போட்டு விட்டுச் சும்மா இருக்கப் பார்க்கின்றனர். யுத்தத்திற்குப் பின் பார்த்துக் கொள்ளலாம்

என்பது அவர்கள் எண்ணம் போலும்! இங்கிலேயில் கல்வித்துறையில் ஈடுபட்டுள்ள அறிஞர்கள் சர்க்காரைப்போல அலட்சியமாயில்லாது, ஒரு சிலராயினும் கல்வி வளர்ச்சிக்கு என்னென்ன செய்ய வேண்டுமென்று ஆராய்ச்சி புரிந்து வருவது மகிழ்ச்சிக் குரியதாகும். சமீபத்தில் வேலூரில் நடைபெற்ற முப்பத்து மூன்றாவது மாகாணக் கல்வி மகாநாட்டில் இவ்வறிஞர்களின் சிரத்தை பிரதிபலித்தது. மகாநாட்டுத் தலைவரான ஸ்ரீ கே. ரங்கசாமி ஐயங்கார் தமது தலைமைப் பேருரையில் கல்வி வளர்ச்சிக்கான அரிய யோசனைகள் பலவற்றைக் கூறியிருப்பது இங்கு குறிப்பிடத் தக்கது. இந்த யுத்தத்தினால் நமது மாகாணத்தில் கல்வி முறை எவ்வளவு தூரம் எவ்விதமாகப் பாதிக்கப்பட் டிருக்கிறது என்பதை அவர் விளக்கிக் கூறினார். கல்வி விஷயத்தில் இந்தியா பிரிட்டனேயும் சீனாவையும் பின்பற்ற வேண்டு மென்று அவர் எடுத்துச் சொல்லியது கவனத்தில் வைக்கத் தக்கதாகும். யுத்தத்திற்குப் பின் திருத்தி யமைக்கப்படும் கல்வி மீண்டும் உலகில் யுத்தம் நிகழாதபடி தடுக்கக் கூடியதாக இருக்க வேண்டு மென்று அவர் ஆசைப் படுகிறார். மகாத்மா காந்தி வகுத்துத் தந்த வார்தா கல்வித் திட்டம் உலகில் யுத்தம் முதலியவைகளைத் தடுத்து நிரந்தரமான சமாதானத்தையும் சந்துஷ்டியையும் ஏற்படுத்தக் கூடும் என்று அவர் பெரிதும் நம்புகிறார். ஆகவேதான் அவர், "வார்தா கல்வித் திட்டத்தைத் தயாரித்த மகாத்மா காந்தி ஆசிரியர்களுக் கெல்லாம் ஆசிரியராவர். அஞ்ஞான இருளிலும் வறுமையிலும் புரண்டு உழலும் பல் கோடிக் கணக்கான நம் நாட்டு மக்களின் கஷ்டங்களையும் துன்பங்களையும் வாழ்க்கை நலன்களையும் காந்தி யடிகள் ஒருவரே யறிவார். நம் தேச மக்களுக்கு 'ரட்சக'ராக அவர் இருக்கிறார்" என்று மனமாறப் போற்றி யிருக்கிறார். மேலும் ஸ்ரீ. ஐயங்கார், "அத்தகைய மகானால் வார்தா கல்வித் திட்டம் நமக்குக் கிடைத்துள்ளது. அத்திட்டத்தில் பல அம்சங்கள் நம் நாட்டில் அமுலுக்குக் கொண்டு வரப்பட் டிருக்கின்றன. யுத்தத்திற்குப் பிறகு அத்திட்டத்தை அடிப்படையாகக் கொண்டு கல்வியின் மேற் கட்டடத்தைக் கட்டியாக வேண்டும். அப்படிச் செய்யும் பொழுது, மத்தியதரக் கல்வி, உயர்தரக் கல்வி என்று இப்பொழுது கற்பிக்கப் பட்டுவரும் கல்வி முறையில் பல அம்சங்களை ரத்து செய்ய வேண்டி யிருக்கும். கட்டாய ஆரம்பக் கல்வி ஏற்படுத்தினாட்டில் படிப்பின்மையை அடியோடு ஒழிக்க ஒரு இலவச கட்டாய ஆரம்பக் கல்வித் திட்டமும் ஏற்படுத்த வேண்டும். தேசியப் பாதுகாப்புக்காக இராணுவப் பயிற்சியும் கற்பிக்க புது கல்வித் திட்டத்தில் இடமிருக்க வேண்டும்" என்று கூறியிருக்கிறார்.

ஆரம்பக் கல்வி முறைப்பற்றி ஸ்ரீ ஐயங்கார் தமது பிரசங்கத்தின் ஆரம்பத்தில் குறிப்பிடுகையில், "கல்விப் பிரச்சினைக்குள்ள இரண்டு முக்கியமான அம்சங்களை நான் இங்கு வற்புறுத்த விரும்புகிறேன். குழந்தைகளிடையே மறைந்து கிடக்கும் சக்திகளை வெளிப்படுத்தி அபிவிருத்தி செய்ய அக் குழந்தைகளுக்குத் தேவையான வசதிகள் அளிக்க வேண்டும். அப்பொழுதுதான் அக் குழந்தைகள் நாட்டின் பிரஜைகளாக வளர்ந்து சரியான காலத்தில் நாட்டின் முன்னேற்றத்திற்குப் பாடுபட முடியும். இரண்டாவதாக, கலைக் கல்விக்கும் தொழில் கல்விக்கும் ஸ்வபாவமாக இருக்கும் தொடர்பை நாம் அறிந்துகொள்ள வேண்டும். யுத்தத்திற்குப்பின் ஏற்பட இருக்கும் கல்வியில் கலைப்பயிற்சியும் தொழில் பயிற்சியும் சேர்ந்துள்ள ஒரு திட்டப்படி கல்வி போதிப்பதுதான் முக்கியமானது. இம்மாதிரி திட்டந்தான் வார்தா "பேஸிக் கல்வி" யாகும். என்று கூறினர்

இதன் பின் ஸ்ரீ ஐயங்கார், "தாய் மொழி வாயிலாகத்தான் கல்வி கற்பிக்கப்பட வேண்டும்" என்று வற்புறுத்தி யிருப்பதையும், அதற்கு அவர் கூறும் காரணத்தையும் ஆங்கிலம் போன்ற அன்னிய மொழிகளில் மிகவும் மோகமுடைய அன்பர்கள் கவனிக்க வேண்டும். "ஆங்கில மொழி மூலம் கல்வி கற்பித்து வருவதன் காரணமாக நம் நாட்டின் கல்வித் தரம் குறைந்து விட்டது. ஆகவே, தாய் மொழியில் தான் கல்வி கற்பிக்க வேண்டும். சமீபத்தில் தமிழ் மொழி மூலம் பாடம் சொல்லிக் கொடுக்கும் திட்டம் அமுலுக்கு வந்ததில் மாணவர்களின் அறிவு பெருகி யிருக்கிறதே யொழிய குறையவில்லை. ஆங்கில மொழியின் தரம் குறைவதனல் ஒன்றும் கெட்டுப்போய் விடாது. சர்வகலாசாலை வகுப்புகளிலும் தாய் மொழியையே முக்கியமாகக் கொண்டு பாடம் கற்பிக்க வேண்டியது அவசியம்" என்று ஆணித்தரமாகப் பதில் அறைந்திருக்கிறுர்.

கடைசியாக, ஆசிரியர்களுக்கும் ஸ்ரீ ஐயங்கார் ஒரு வார்த்தை சொல்லி யிருக்கிறுர். "மாணவர்களுக்காகவே ஆசிரியர்கள் வாழ்ந்து வளர்ந்து கல்வி பயின்று உழைத்து சந்தர்ப்பம் ஏற்பட்டால் உயிரையும் விடத் தயாராக இருக்க வேண்டும்" என்று கூறி யிருப்பதை ஆசிரியர்கள் மனத்துள் குறிக்கொள்வார்கள் என்று நம்புகிறோம். இவ்விதம் கல்வி வளர்ச்சி பெற்று மக்களிடையே வேரூன்றி அறியாமை இருளைப் போக்க முயலப்படுமானல், இன்று மக்களைப் பீடித்துள்ள யுத்தம் மட்டுமல்ல; சகல பீடைகளும் சூரியனைக் கண்ட பனி போல இருக்கு மிடந் தெரியாமல் மறைந்து ஒழியும். மக்கள் நல்வாழ்வு வாழ்வார்கள் என்று நாம் கூற விரும்புகிறோம்.

# சந்தா நேயர்களுக்கு வேண்டுகோள்

## 29-வது ஆண்டின் முன் அறிக்கை

நாளது சுபானு ஆண்டு ஆடித்திங்கள் முதல் நாளன்று (16-7-43) "ஆனந்தபோதினி" மாதப் பத்திரிகைக்கு 29-வது ஆண்டு பிறக்கப் போகிறது. 'ஆனந்தபோதினி' காலதேச வர்த்தமானத்துக்கு இணங்க வளர்ச்சி பெற்றுப் பற்பல சிறப்பியல்புகளுடன் விளங்கி வருவது நேயர்கள் அனுபவத்தில் உணர்ந்துள்ள விஷய மாகும். தமிழ் மக்களுக்கு எல்லாத் துறைகளிலும் அறிவையும் முன்னேற்றத்தையும் உண்டாக்கித் தக்க வழி காட்டியாய் விளங்குவதே "ஆனந்த போதினி"யின் முதற்பெரு நோக்க மாகும். 29-வது ஆண்டில் இன்னும் பல விசேஷ அம்சங்களுடன் "ஆனந்தபோதினி" உங்களுக்கு மகிழ்ச்சிப் பெருக்கை அளிக்கும் என்று தெரிவித்துக் கொள்ளுகிறோம். அத்துடன் இவ்வாண்டு காகித அகவிலை காரணமாக, "ஆனந்தபோதினி" சந்தாத் தொகையை இரண்டு ரூபாயாக உயர்த்தியிருப்பதை, சென்ற சித்திரை இதழிலேயே தெரிவித்திருக்கிறோம்; ஆதலால், "ஆனந்தபோதினி"யின் பால் அன்புபூண்டு ஆதரித்து வரும் வாசக நேயர்கள் அனைவரும் 29-வது ஆண்டின் சந்தாத் தொகையை (சென்ற இதழில் குறித்துள்ளபடி ஆனி மாத இதழுக்கு நான்கணா ஸ்டாம்பு அனுப்பாதவர்கள்) சந்தா விகிதம் ரூபாய் இரண்டுடன் நான்கணாவுஞ் சேர்த்து நாளது சுபானு வருஷம் ஆனி மீ 28-ந்தேதி (12-7-43)-க்குள் மணியார்டர் மூலமாகவோ நேரிலோ எங்களுக்குக் கிடைக்கும்படி செய்ய வேண்டுகிறோம். சந்தாத் தொகையின் பொருட்டு வி. பி. அனுப்புவதால் தபால் செலவு 4 அணா மணியார்டர் கமிஷன் இரண்டணா ஆக ஆறு அணா அதிகமான ஜாஸ்தியான செலவும் சஞ்சிகை வந்து சேர வீண் கால தாமதமும் ஆகும். ஆகையால் எல்லா நேயர்களும் மேற் குறிப்பிட்ட தேதிக்குள் மணியார்டர் செய்து விடுவதுதான் உங்கட்கும் எங்கட்கும் லாபமும் சௌகரியமும் ஆகும். வி. பி அனுப்புவதால் இன்னொரு சங்கடமும் உண்டு. அதாவது வி. பி. வந்தால் ஏழு நாளைக்கு மேல் தபாலாபீஸில் வைத்திருக்க மாட்டார்கள். அதற்குமேல் இருக்கவேண்டும் என்று விரும்புகின்றவர்கள் நாள் 1-க்கு 2 அணா வீதம் ஸ்டாம்பு வாங்கி ஒட்டி விண்ணப்பித்துக் கொள்ளவேண்டும். அதுவும் 10 நாட்களுக்கு மேல் தபாலாபீஸில் வைத்திருக்க மாட்டார்கள். இந்தச் சங்கடங்களை யெல்லாம் நோக்கும் போது அன்பர்கள் எல்லோரும் சந்தாத் தொகையை முன் பணமாக அனுப்பி ஆதரிப்பதே நலம்.

குறிப்பு:—முன் பணம் அனுப்புவோர் பழைய சந்தாதாரர்களாயிருந்தால் மணியார்டர் கூபனில் தங்களுடைய சந்தா நம்பரைக் குறிப்பிட்டு "29-வது ஆண்டுக்கு" என்று விவரம் எழுதவேண்டும். புதிய சந்தாரர்கள் 'புதிய ஆண்டிற்கு' என்ற விவரம் எழுதவேண்டும்.

மானேஜர்.

# அறிஞர் திரு. வி. க.

(குரு)

கருமைக்கும் மாநிறத்துக்கும் நடுத்தரமான நிறம்; மெலிந்த உடல்; உறுதியைக்காட்டி விறைப்பாக நிற்கும் உச்சிக் குடுமி; பெண்மை கனிந்து ஒளி வீசும் முகம்; உயர்ந்த மூக்கு; துடிக்கும் புருவம்; விரைவாக மூடி மூடித் திறக்கும் கண்கள்; நெற்றி விளக்கும் சந்தனப் பொட்டு; முறுவலிக்கும் இதழ்கள்; வெள்ளைக் கதர்ச்சட்டை; சட்டையில் நூல் பொத்தான்கள்; அரையில் கதர் வேட்டி—இவர் தாம் திரு. வி. க. ஆளைப் பார்த்தால் பிரமாதமாகத் தெரியவில்லை. 'பெருமை பெருமிதம் இன்மை' என்பது இவருக்காகத்தான் கூறப்பட்டது போலும்.

திரு. வி. க. இன்று அறுபதாண்டான இளைஞர். படிக்கின்ற காலத்திலே தமிழாசிரியர் கதிரைவேற் பிள்ளையோடு கொண்டிருந்த தொடர்பு நீடித்திருக்கவேண்டு மென்பதற்காக—தமிழோடு தம் உறவு பெருகவேண்டு மென்பதற்காக—ஆங்கிலப் படிப்பை வெறுத்துப் பரிசு பெற்ற ஆங்கிலப் புத்தகங்களைப் பள்ளியின்முன் பலரும் காணக் கொளுத்திப் பள்ளிப் படிப்பை விட்டார். பின்னர் அரவிந்தர் நடத்திய 'வந்தே மாதரம்' என்ற பத்திரிகைமேல் கொண்ட வெறியால் ஸ்பென்ஸர் கம்பெனி வேலையை வேண்டாமென விடுத்தார். அடுத்தாற் போலத் தமிழாசிரியப் பதவியை ஏற்றார். தமிழாசிரியராக ஆறு ஆண்டுகள் கழித்தார். நாடு அவரை விழைந்தது; நாட்டுப்பற்று அவரைப் பொதுநலப் பணிக்கு அழைத்தது. 1917-ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் தமிழாசிரியர் பதவியை விட்டு விலகினார். 'தேச பக்தன்' ஆசிரியராகப் பணி ஏற்றுத் தூய தெள்ளத் தெளிந்த தமிழால் நாடெங்கும் தேசபக்திக் கனலைப் பரப்பினார். அந்தப் பதவியிலே மூன்று ஆண்டுகள் கழிந்தன. 'நவசக்தி' பிறந்தது; திரு. வி. க. அதன் ஆசிரியர். 'நவசக்தி'யுடன் தொழிலாளர் இயக்கமும் பிறந்தது. திரு. வி. க. அதன் தலைவர். இந்தியாவில் தோன்றிய முதல் தொழிலாளர் இயக்கம் அதுதான்; அதுவே இந்தியாவில் முதல் வேலைநிறுத்தம் நடத்தியது.

தமிழுக்காக ஆங்கிலப் படிப்பையும், உரிமைக்காக ஊதிய வேலையையும், நாட்டுக்காகத் தமிழாசிரியப் பதவியையும் விடுத்த திரு. வி. க. கொள்கைக்காக வாழ்பவர். குறிக்கோள் ஒன்று, செய்வது இன்னொன்று என்பது அவரிடம் இல்லை. காங்கிரசிலிருந்து அவர் விலகியதும் இந்த அடிப்படையான கொள்கை பற்றித்தான் என்பது அவருடன் பழகியவர்களுக்குத் தெரியும். கொள்கைக்காகத் தியாகம் செய்பவர் திரு. வி. க. தம் கொள்கையோடு முரண்பட்டபோது அரசியலை விட்டு விலகினார். தொழிலாளர் இயக்கத்தோடு மட்டும் சிறிது தொடர்பு இன்னும் இருக்கிறது. எனவே அவருடைய வாழ்க்கை இன்று பெரும்பாலும் துறவு வாழ்க்கைதான். தமிழ் அவரை விடாது; அவரும் தமிழை விடமாட்டார். எனவே அவருடைய துறவு அங்கே அணுக முடியாது. — இதுதான் அவர் வரலாறு. நமக்குத் தெரியவேண்டிய தெல்லாம் அவர் வாழ்வின் சாரம்—எதற்காக எப்படி வாழ்ந்தார் என்பது.

திரு. வி. க. தமிழறிஞர்; தமிழன்பர்; தமிழ் பரப்பும் தொண்டர். ஐயரவர்கள் சங்க இலக்கியச் சங்கை வெளிப்படுத்தினார்களென்றால் திரு. வி. க. அச்சங்கு கொண்டு நாடெல்லாம் முழக்கித் தமிழைப் பரப்பினார். காதல், வீரம், இயற்கை வழிபாடு, அன்பு, அருள்......என்றின்ன தமிழருடைய கொள்கைகளை யெல்லாம் சங்க இலக்கியங்களின் வாயிலாக அறிந்து தமக்கே உரிய எழுச்சி மிக்க அழகிய தமிழில் எழுதிப் பரப்பினார். அவ

ருடைய தமிழில் எழுச்சியுண்டு; அது தட்டி எழுப்பும். திரு. வி. க. வின் தமிழ் அழகியது; எல்லோரையும் அது தன்பால் ஈர்க்கும். செறிவு மிக்கது அவருடைய எழுத்து; பயில்வோரை ஆழ்ந்து எண்ணச் செய்யும் ஆற்றல் வாய்ந்தது அது. அப்பெரியார் எழுதி யிருக்கின்ற நூல்கள் என்றும் நின்று நிலவும் இலக்கியங்கள். 'மனித வாழ்க்கையும் காந்தியடிகளும்', 'முருகன் அல்லது அழகு', 'பெண்ணின் பெருமை', 'உள்ளொளி' முதலியன இங்கே குறிப்பிடத் தக்கன. திருக்குறளின் சில அதிகாரங்களுக்கு எழுதி யிருக்கின்ற விரிவுரை மிகப் பெருமை வாய்ந்தது. அவருடைய நூல்களின் சிறப்பை முழுதும் எழுதி முடித்தல் இங்கு இயலாத ஒன்று. சுருங்கச் சொல்ல வேண்டுமானால் தமிழ்நாடு கண்ட திறமான எழுத்தாளர்கள் மிக மிகச் சிலருள் திரு. வி. க. முதல்வர்; வழிகாட்டி. அவருடைய வாழ்வு தமிழில் தொடங்கியது; இன்றும் தமிழில் தோய்ந்திருக்கிறார் அவர். திரு. வி. க. முதலில் தமிழர், அதனால் தமிழை ஓம்புகிறார்; வழி படுகிறார்.

திரு. வி. க. வும் ஒரு காலத்தில் தமிழ்ப் பண்டிதர்தாம். இன்று நாம் காணும் தமிழ்ப் பண்டிதர்களுள் பெரும்பாலவர்க்கு உலகம் தெரியாது. அந்தக் கூட்டத்தைச் சேர்ந்தவரல்லர் திரு. வி. க. வெளி உலகம் அவருக்கு நன்றாகத் தெரியும். அதனால்தான் அரசியலில் அவர் வாழ்வு கலந்தது; தொழிலாளர் இயக்கத்தைக் கண்டது. அரசியலில் தலைவராக விளங்கினார்; தமிழ்நாடு முழுவதிலும் உரிமை உணர்ச்சியையும், காங்கிரசின் பெருமை யையும் பரப்பித் தொண்டு புரிந்தார். அவருடைய தியாகப் பண்பும் அறி வின் திறமையும், நாவன்மையும் அரசியலில் அவருக்குத் தலைமை தந்தன. இன்றும் அவருடைய சொல்லுக்கு அரசியல் கூட்டத்தில் சிறந்த செல்வாக் குண்டு. இந்த நெருக்கடியில் அவருடைய தலைமையில் தமிழ்நாடு இல் லாமலிருப்பது வருந்தத் தக்கதுதான். அரசியலில் எவ்வளவு தலைமையும் செல்வாக்கும் உண்டோ அவ்வளவு தலைமையும் செல்வாக்கும் தொழி லாளர் இயக்கத்திலும் அவருக்கு உண்டு. தொழிலாளர் ஒவ்வொருவரும் அவரைத் தெய்வமெனக் கொண்டாடுகின்றனர். தொழிலாளிகட்கு அவர் 'வழி காட்டும் வான்பொருளாக' இலங்குகிறார்.

சொற்பொழிவுகள் செய்வதிலே சிறந்த ஆற்றல் அவருக்கு உண்டு. கூட்டத்திற்கேற்ற முறையில் பேசி, கூட்டத்தினரின் உணர்ச்சியைத் தம் மோடு ஈர்த்துச் செல்லுவார். உணர்ச்சி ததும்பப் பேசுவதில் சிறந்த நாவ லர் திரு. வி. க.

திரு. வி. க. நாவலர் மட்டுமல்லர்; பாவலருங்கூட. அண்மையில் வெளி வந்திருக்கின்ற 'பொதுமை வேட்டல்' இங்கே குறிப்பிடத் தக்கது. சிறந்த பாடல்கள்; பொதுமை நெறியை விளக்குவன.

திரு. வி. க. பெண்ணுரிமை நாடிப் போரிடும் போர் வீரர்; இளைஞர்க்கு வழி காட்டி. அவ்விரு பாலார்க்கும் ஊக்கம் தருகின்ற ஊற்று. புகழ்ந்து புகழ்ந்து அவர்களுக்கு ஊக்கம் கொடுத்து நல்ல வழிகளைக் காட்டுவார். பெண்டிர்க்கும், இளைஞர்க்கும் சிறந்த தலைவர்: தந்தை நிலையினர்.

அறுபதாண்டின் அனுபவத்தின் பின்னர் இன்று திரு. வி. க. சிறந்த கருத்துப் பழமாகக் கனிந்து நிற்கிறார். திரு. வி. க. அறிவு 'கனிந்து முதிர்ந்த இளங்கனி.' அவர் தம் அநுபவத்தால் கூறுவனவற்றுள் இரண்டு தலைமை யானவை. ஒன்று தமிழர் ஒற்றுமைப்பட வேண்டும். இரண்டு சாதி சம யச் சழக்குகள் ஒழிந்து சமரசம் நிலவவேண்டும். இந்த இரண்டுக்கும் அவர் கூறுகின்ற வழிகளும் உண்டு. தமிழர்கள் தமிழ்மொழியின் வாயி லாக—தமிழ்க்கலையின் வாயிலாக—ஒன்றுபட வேண்டும். சமரச சன்

(484-ம் பக்கம் பார்க்க.)

# விஞ்ஞானம் விரிதல்

(டி. பி. நவநீத கிருஷ்ணன்; அண்ணமலை நகர்)

இவ்வுலகில், எக்காலத்தும் இடையருது சம்பவங்கள் நடை பெற்றுக் கொண்டே யுள்ளன. இவற்றில் சில இயற்கையாய் நடைபெறுகின்றன வென்கிறோம்; மற்றுஞ் சில செயற்கை முறையை யொட்டி நடைபெறுகின்றன வென்கிறோம். இவ்வாறு, செயற்கையால் நடைபெறுகின்றன வென நாம் குறிப்பிடுபவை முற்றிலும் செயற்கையானவையா? அன்று இயற்கையில் நடைபெறுபவற்றை ஊன்றிக் கவனித்து, அவற்றிற்கான காரணங்களை யறிந்து, அதன்பின் அறிவால் ஆராய்ந்து, செய்வதையே செயற்கை முறை என்கிறோம். எனவே, மக்கள் தம்மைச் சுற்றிலும் நடைபெறும் நிகழ்ச்சிகள் தம் கட்டுக்குள் அடங்கி நடைபெறுமாறு செய்ய, முயல்கின்றனர். அவ்வாறு, மக்கள், தம்மைச் சூழ்ந்துள்ளவற்றின் மீது, தம் ஆட்சியை நாட்டுகின்றனர். இவ்வாட்சிக்கு அடிப்படையாயுள்ளதான, வரையறுக்கப் பட்ட அறிவியல் முறையே விஞ்ஞானமாம்.

ஆரம்பத்தில், மக்களினம் ஒன்று, விலங்குகள் போன்றே ஐம்பொறியின் துணை கொண்டு மட்டுமே வாழ்ந்தது. பின், அவர்களில் அறிவு அரும்பிற்று. அவ்வறிவின் துணை கொண்டு இயற்கையைப்பற்றி ஆராயலாயினர். இயற்கை நிகழ்ச்சிகளைப் பற்றி அவர் கொண்ட கருத்துக்கள் புதுவகையில் ஏற்படலாயின. இதனால் ஐம்புலன்கள் மட்டுமே பெற்ற விலங்குகளைவிடச் சிறந்த ஆறறிவுடன் கூடிய மக்களினம் பரிணமித்தது. சிறத்துத் தோன்றிய மக்கள், இயற்கையைப் பற்றித் தாம் பெற்ற அரும் அறிவைப் பெருக்கி, பயனுறு வழிகளில் பயன்படுத்தலாயினர். தாமறிந்த அறிவை நாடொறு நடைமுறை அலுவல்களினின்றே பெற்றனர். மக்களாற்றும் வினைகளிலும் அறிவு நுழைந்ததால், விஞ்ஞானம் முளைத்தது. மேலும், மேலும் இயற்கை நிகழ்ச்சிகளை ஊன்றிப் பார்த்து, ஆராய்ந்ததால் விஞ்ஞானம் வளர்ச்சியுற்றது.

இயற்கையின் இரகசியங்களில் சிலவே இதுகாறும் அறியப்பட்டுள்ளன. அவை யெல்லாவற்றையும் அறிதல் இயலாது. ஏனெனில், இயற்கையின் மறைகள் எல்லாம் எவை யென்பதை எவர் அறிவார்? அவை வரம்பினி லடங்காதவை. ஆதலின், இயற்கைச் சம்பவங்களுக்குக் காரணம் அறியும் முகத்தான் செய்யப்படும் விஞ்ஞான ஆராய்ச்சிகளும் முடிவற்றவை. அவை எல்லையற்ற இயல்பினவை. சுமார் ஐந்து லக்ஷம் ஆண்டுகளுக்குமுன் ஆரம்பமான விஞ்ஞானம், முடிவின்றி, வளர்ந்து சிறந்து கொண்டேயுள்ள அழிவற்ற தொன்றும்.

மக்கள் உற்பத்தி நூல் அறிஞர் (ஆந்த்ரோ பாலஜிஸ்ட்ஸ்), மக்கள் சரித்திரத்தைப் பல காலப் பகுதிகளாய்ப் பிரித்துள்ளனர்.

அவை, பழங்கற்காலம், புதுக்கற்காலம், வெண்கலக் காலம், இருப்புக் காலம் என்பனவாம். ஒவ்வொரு காலப்பகுதியும், அக் காலத்து வாழ்ந்த மக்கள் கையாண்ட கருவிகள் செய்யப்பட்ட பொருள்களைப் பின்பற்றி பெயரிடப் பட்டுள்ளது. உலகின் பல பாகங்களில், ஆங்காங்கே வெட்டி யெடுக்கப்பட்ட பாண்டங்கள், மக்கள் இருப்பிடங்களின் இடிந்த பகுதிகள், முதலியவற்றை ஆராய்வதால், மக்கள் உற்பத்தி நூலறிஞர், பண்டைக் காலத்து மக்களைப் பற்றின விடயங்களை அறிகின்றனர். அவற்றைக் கொண்டு அக் காலத்து மக்களின் வாழ்க்கை முதலியவற்றைப் பற்றி ஒருவாறு அறியலாம். பண்டைக்கால மக்களின் வாழ்க்கையை வெளிப்படுத்தும் சின்னங்கள் பல இடங்களில் வெட்டி யெடுக்கப் படுகின்றன. அவற்றின் இயல்பினின்றும், எண்ணிக்கையைப் பொருத்தும், அவ்வக் காலங்களில் வாழ்ந்த மக்கள் தொகை எவ்வளவென்பதையும், மக்கள் உற்பத்தி நூல் அறிஞர் கணக்கிடுகின்றனர். இவ்வகையில் கணக்கிட்டதில், பழங்கற் காலத்தில் மக்கள் நெருக்கம் அதிகமாயில்லை என அறியப்பட்டது. பழங்கற்காலம், சுமார் கி. மு. 5,00,000 முதல் கி. மு. 25,000 ஆண்டுகள் வரையுள்ள காலம் எனவும் அவ்வறிஞர் கணக்கிட்டுள்ளனர். பழங்கற்காலத்து மக்கள், இக்காலத்து மக்களினின்று வேறுபட்ட இனத்தினர். அவ்வினமே, இவ்வுலகினின்று மறைந்து விட்டது. அம்மக்கள் நிமிர்ந்து நடந்துசெல்ல இயலாதவர். கைகளையும் தரையில் ஊன்றி, விலங்குகள் போல், நடமாடினர். கூர்மையான பற்களுடனிருந்தனர். வலிமையான தாடைகளுடனிருந்தனர். ஆதலின் ஆயுதங்களின்றியும் மற்ற விலங்குகளுடன் போரிடும் திறமை வாய்ந்தவர். மேலும், அவர்கள் மற்ற விலங்குகளைவிடப் பெரிதான மூளை பெற்றவர்கள். புதுக்கற் காலத்தவர், தற்காலத்தினரைப் போன்ற உடலமைப்புடனிருந்தனர். இப்பொழுதுள்ள மாந்தரினம் அக்காலத்தே தோன்றியது எனலாம். புதுக்கற் காலத்தில், மக்கள் தொகையும் அதிகரித்தது. அக்காலம் கி. மு. 25,000 முதல் கி. மு. 5000 ஆண்டுவரை நீடித்திருந்தது. அதன்பின், மக்கள் தொகை மேலும் பன்மடங்கு பெருக்கமடைந்தது. கற்கருவிகள் கைவிடப் பட்டன. வெண்கலம் கண்டுபிடிக்கப் பட்டது. வெண்கலக் காலம் தொடங்கிற்று. அக்காலம் கி. மு. 5000 முதல் கி. மு. 2000 ஆண்டுகளுக் கிடைப்பட்ட காலம். வெண்கலக் காலத்திற்குப்பின் இருப்புக் காலம் வந்தது. இரும்பாலான கருவிகள் பெரிதும் வழங்கப்படலாயின. அக்காலம் கி. மு. 2000-ம் முதல் இன்று வரையிலுள்ள காலம் என மக்கள் உற்பத்தி நூல் அறிஞர் சிலர் சொல்கின்றனர். ஆனால், கி. பி. பதினெட்டாம் நூற்றாண்டில் தொடங்கி, மேலும் மேலும் விரைவாய், பல முன்னேற்றங்களுடன் செல்லும் விஞ்ஞானப் பெருக்கத்தைக் கருதுங்கால், கி. பி. 1800-ம் ஆண்டில், மக்கள் சரித்திரத்தின் ஐந்தாவது காலப்பகுதி ஆரம்பமாகியுள்ளது எனக் கொள்ள இடமுண்டு எனச் சில அறிஞர் சொல்கின்றனர். இக்காலத்தில் நீராவி இயந்திரங்கள், மின்சார ஆற்

றல் என்பவற்ருல் மக்கள் வாழ்க்கை முறையே மாறுபட்டுள்ளது எனும் கருத்தை அவர்கள் வெளிப்படுத்தி யுள்ளனர். ஆதலின் 'இயந்திர-ஆற்றல்' காலம் எனும் காலப்பகுதியில் நாமுள்ளோம் என்பது அவர்கள் கருத்து.

பழங் கற் காலத் திருந்த மக்கள் இனத்தினர், நம்மைவிட் வலிமையான பற்கள், நகங்கள் முதலியவற்றுடன் இருந்தாரெனினும், மற்ற பிராணிகளைவிட் வலிமை குறைந்தவராகவே யிருந்தனர். ஆனல், கைகள் பெற்றிருந்தமையின், கற்களாலும் மரக் கொம்புகளாலும், ஆயுதங்களைச் செய்யும் வன்மை வாய்த்தவராயினர். கைகளைக் கொண்டு கருவிகளை யுண்டாக்கும்போது, அறிவும் தேர்வுற்றது. காலாந்திரத்தில் நிமிர்ந்து நடக்கவும் முடிந்தது. இங்ஙனம் ஒரு புது இனம் பரிணமித்தது. எல்லா விலங்குகளிலும் கண்கள், தலையின் பக்கவாட்டங்களில் உள்ளன. மனிதனது கண்கள் முகத்தில் ஒரு பொருளை இரு கண்களாலும் பார்க்கும் ஆற்றலை யடைந்தான். இவ்வாற்றல் மற்ற விலங்குகளுக்கில்லை. ஒரு பொருளை இரு கண்கொண்டு ஒருங்கே நோக்கும் ஆற்றலே மக்களினத்தின் உயர்ச்சிகளுக்கு அடிப்படையான காரணம். இவ்வாருன பார்வையே, தூரம், அண்மை எனும் வேற்றுமையை அறிதற்குக் காரணமா யுள்ளது. இதனல், கைகள் பிடித்துள்ள பொருளை முன்னும் பின்னுமாய் இழுத்து வேலை செய்யக் கண்கள் உதவுகின்றன. எனவே, கைகளால் பொருள்களைச் செம்மையாக்கி உருவாக்கும் திறமை ஏற்படுகின்றது. கண்ணும் கையும் இசைவதாலேயே கைத்திறன் ஏற்படுகின்றது. கை தேர்ந்த வேலையில் மனிதன் முனைகின்ருன். கண்கள் ஊன்றிக் காணும் பயிற்சி ஏற்படுகின்றது. அப்பொழுது மூளையும் ஈடுபடுகின்றது. அறிவும் பணியாற்றலில் ஈடுபடுகின்றது; அதனல் வளர்ச்சி யடைகின்றது. எனவே, கருவிகள் கொண்டு கையால் வேலை செய்யும் திறனே, அறிவு வளர்ச்சிக்கு மூலமாயுள்ளது எனலாம். செயல் முயற்சி அறிவு வளர்ச்சிக்கு அடிப்படையானது என ஏற்படுகின்றது. இவ்வாறு பெறப்பட்ட அறிவு முதிர்ச்சி, மேலும், மேலும் மலர்வதற்கு, சிந்தனை மட்டுமே போதும். அதாவது, அறிவு சிறந்த பின், மேலும் சிறப்பதற்கு, கைத்தொழில் அவசியமன்று. ஆனல், விலங்கினத்தை விட மேலான மக்களினம் சிறப்பதற்கு கையால் வேலை செய்யும் தேர்ச்சியே காரணமா யிருந்தது என்பதை மறத்தலாகாது. கருத்தூன்றிச் சிந்தனை செய்யும் வழக்கம் செயல் முறைப்பயிற்சியினின்றே தொடங்குகின்றது. இயற்கையாகவே, ஆழ்ந்து கருத்தூன்றிச் சிந்தனை செய்யவல்ல சிறந்த அறிவாளிகள் சிலரைத் தவிர. ஏனைய பெரும்பான்மையோர் வினை செய்வதால் பெற்ற அறிவாலேயே, தமக்கும் பிறருக்கும் பயனுறும் வண்ணமாவர். இக் கருத்தை எலியட் ஸ்மித் என்ற அறிஞர் சிறந்த முறையில் விளக்கி யுள்ளார். மாந்தரது உடலமைப்பும், நரம்பு மண்டலமும், மூளைத் தேர்ச்சியும், கருத்தூன்றிய கைத்தொழிற் பயிற்சியால்

சிறக்கும் வண்ணம் அமைந்துள்ளன என அவர் எடுத்துக் காட்டியுள்ளார்.

எனவே, தற்காலத்தில் நாம் விஞ்ஞானம் என அழைக்கும் அறிவியல், பண்டைக்காலத்து மக்கள் கருவிகள் செய்து கைத்தொழிலில் முனைந்ததால் அடைந்த வளர்ச்சி பரிணமித்ததேயாம். தற்கால விஞ்ஞானமும், தொழின் முறைத் தேர்ச்சியும் அடிப்படையாய் ஒன்ருனவையே. தொழின் முறை நுட்பங்களில் மட்டுமே அவை வேற்றுமையானவை. ஐந்து லக்ஷம் ஆண்டுகளாய், கண்ணுங் கருத்தும் கரமும் ஒன்றுபட்டுழைத்ததால் ஏற்பட்ட விளைவே விஞ்ஞானம். ஆதலின் முதற்கருவியைக் கண்டு பிடித்தவரே முதன் முதலான விஞ்ஞானிகளாம். செயல்முறைப் பயிற்சியே, அறிவு வளர்ச்சிக்கு அடிப்படையானது. செயல்முறைத் தேர்ச்சிக்கு அறிவு அவசியம். தேர்ந்த அறிவாளிகள், மேலும் மேலும் சிந்தனை செய்வதால் தம் அறிவைப் பெருக்கலாம்; அதாவது சிறந்த அறிவு மேலும் சிறப்பதற்கு கைத்தொழில் தேவையில்லை. ஆனல் அவ்வறிவுப் பெருக்கம் பல மக்களுக்கும் பயன் பட வேண்டுமாயின், அது தொழின் முறையிலும் பலன் தர வேண்டும். எவ்வாருயினும், விலங்கினத்தைவிட மேலான மக்களினம் சிறப்பதற்கு, கைகொண்டு கருவிகள் அமைப்பதற்கான தேர்ச்சியும், அதன் பாற்பட்ட அறிவுமே காரணமா யிருந்தது என்பதை என்றும் நினைவி லிருத்தவேண்டும்.

இப்பொழுது உலகில் ஏற்பட்டுள்ள கோளாருன நிலைமைக்குக் காரணம் விஞ்ஞானமே யென்று கூறி, அதன் மீது வீண் பழி சுமத்தலாகாது. இப்பொழுதுள்ள மக்களினம் பரிணமித்ததற்குக் காரணமே விஞ்ஞானம். விஞ்ஞானமின்றி; மக்கள் அறிவற்ற விலங்குகளே யாவர். ஆதலின், இன்று எங்கும் பரவியுள்ள இன்னல்களை இழைத்தக் குற்றம், விஞ்ஞானத்தினதன்று. உண்மைக் குற்றவாளி எவர் என்பதை, அறநெறி வழாது, நீதியை நிலைநாட்டப் பாடுபடும் மேன்மக்கள் , உலகினர்க்கு உணர்த்தித் துலக்குவார்களாக! விஞ்ஞானத்தின் உதவியால் உலக முழுமையும் வளமுறச் செய்வார்களாக. மக்கள் வாழ்க்கையை நலமுற விரிப்பதே விஞ்ஞானத்தின் சீரிய நோக்கம் என்பதை நிலைநாட்டுவார்களாக.

---

# ஐய வினாவுக்கு விடை

(க. காசியப்ப கவுண்டர்)

"ஆனந்தபோதினி" பங்குனி இதழில் வெளிவந்த ஐய வினாவைப் பார்த்தேன். அதில் கேட்கப் பெற்றிருக்கும் கேள்வியின் உட்பொருளைக் கவனித்துப் பார்க்க எந்த தமிழனும் கடமைப்பட் டிருக்கிறான்.

திருவிளையாட்ற் புராணத்தில் சொல்லப்பட்டிருக்கும் பாண்டி மன்னர் அவ்வளவு பேரும், அப்புராணக் கதையிற் சம்பந்தப்பட நேரிட்ட தமிழர்களிற் பெரும் பான்மையோரும் வடமொழிப் பெயர்களைக் கொண்டவர்களாயிருக்க காரண மென்ன என்பதே அவ் வினாவின் கருத்தாகும்.

மீனாட்சி யம்மையாரும் சொக்கலிங்கப் பெருமானும் மதுரைமா நகரின் கண் 64 திருவிளையாடல்களை நடத்தி வந்த அக்காலம் முழுதுந் தமிழுக்குத் தனிச்சிறப்பு ஏற்பட்டிருக்க அக்காலங்களில் பாண்டி நாட்டை அரசு புரிந்து வந்த பாண்டி மன்னர்கள் தமிழ் மொழியை வளர்ப்பதிற் கண்ணுங் கருத்துமா யிருந்திருக்க, அவர்களுடைய பெயர்களெல்லாம் வடமொழிப் பெயர்களாயிருக்கும் இரகசியம் வியக்கத்தக்க ஒன்றுதான்.

வடமொழியி னிடத்து அவ்வளவு ஆசை அவர்களுக்கு இருந் திருக்குமானால், அதை வளர்க்க அவர்கள் எவ்வளவோ முயற்சி செய்திருப்பார்கள். அப்படி ஏதும் செய்ததாக சரித்திரங்களால் தெரியவில்லை. பின், பெயர்க ளெல்லாம் இப்படி வரக் காரண மென்ன?

இதைப்பற்றி ஆராய்ச்சி செய்வதா யிருந்தால் முதலில் வடமொழியைப் பற்றியும், அது தென்னாட்டில் பரவிய விதத்தைப் பற்றியும் சரித்திரம் என்ன சொல்கிறது? என்பதைச் சிறிது கவனித்தே ஆகவேண்டும்.

வட நாட்டிலிருந்து வந்ததினால் சம்ஸ்கிருதத்திற்கு வடமொழி என்று பெயர் வந்தது. அது ஆரிய மக்களுக்கு முதலில் தாய்மொழி. ஆரியர் ஒரு காலத்தில் ஐரோப்பாவி லிருந்து வட இந்தியாவிற் குடி புகுந்து, பின் தென்னாட்டுக்கும் வந்து சேர்ந்தவர்கள். குளிர் மிகுந்த நாட்டிலிருந்து வந்தவர்க ளாகையினால், அவர்களுடைய பழக்க வழக்கங்கள் தமிழ் நாட்டாரின் பழக்க வழக்கங்களுக்கு மிக மாறுபட்டிருந்தன.

ஆரியர் இங்கு குடியேறுங் காலத்தில் தமிழ்மொழி சீரும் சிறப்பும் பெற்று விளங்கிக்கொண் டிருந்தது. தமிழ் மக்கள் சைவ ஒழுக்கத்திற் சிறிதும் வழுவாமல், முழுமுதற் பொருளாகிய பரசிவக் கடவுளிடத்து மாறாத மெய்யன்பு வாய்ந்தவர்களாய் விளங்கினர்.

ஆரியர்களுடைய பழக்க வழக்கங்களும் பாஷையின் போக்கும் தமிழர்களுக்குப் பிடிக்காததினால், அவற்றை இவர்கள் வர

வேற்க வில்லை. ஆனல், தமிழர்களின் [illegible] வழக்கங்களைத் தழுவி தமிழரோடு தமிழராய்ச் சேர்ந்து வா[illegible] ஆரியர்[illegible]க்கும் பிரிய மில்லை. அதனல் அவர்கள் தனியே ஒது[illegible]ப் பார் மட்டும் ஒன்று சேர்ந்து ஆங்காங்கே வசித்துவர லாயினர்.

அது மட்டு மல்ல, தங்களுடைய பழக்க வழக்கங்களையும் பாஷையையும் எப்படி யெல்லாம் தமிழர்களிடத்தும் தமிழ்மொழியினிடத்தும் நுழைக்க இயலுமோ அப்படி யெல்லாம் நேர்முகமாகவும் மறைமுகமாகவும் செய்யவுந் தொடங்கினர். இன்றளவும் அப்படியே செய்தும் வருகின்றனர்.

அவர்களிற் சிலர் தமிழில் நல்ல பயிற்சி பெற்றனர். தமிழின் கலை நுணுக்கங்களை நன்ருக அறிந்தனர். அவைகளை வட மொழிக் கிசைவாக அம்மொழியிற் பாடிவைத்து விட்டு, அவை யனைத்தும் வட மொழியிலிருந்து தமிழுக்கு வந்ததாக தமிழில் திருத்தி வைக்கவும் செய்தனர்.

தமிழ் நாட்டில் மிகமிகப் பெரும் பான்மையோர் தமிழ் மக்கள். ஆரியர் மிகமிகச் சொற்பம். தமிழ் மொழி பல்லாயிரம் வருடங்களாக சீருஞ் சிறப்பும் பெற்று, பேச்சு வழக்கிலும் எழுத்து வழக்கிலும் ஒப்புயர் வற்று, கூரிய அறிவு படைத்த புலவர் பெரு மக்கள் பலரால் ஆராய்ச்சி செய்யப் பெற்று, என்றும் அழியாத கன்னித் தமிழாய் நிலவி நிற்கிறது. வட மொழியோ பேச்சு வழக்கில் எப்பொழுதும் இல்லாததினல் செத்த பாஷை (Death-language) எனப் பெயர் பெற்று, ஆரியர்களிற் சிலரால் மட்டும் எழுத்து வழக்கிற் கையாளப்பட்டு வருகிறது.

செய்தி இப்படி இருக்கும்போது, தமிழ் நாட்டுச் சரித்திரங்களும் வரலாறுகளும் தமிழர்களுக்கு விளங்கக்கூடிய தமிழ் மொழியிற் பாடப் பெருமல் அந்த வட மொழியிலேயே முதலிற் பாடப் பெற்றதென்றும், அதிலிருந்தே தமிழில் மொழி பெயர்க்கப்பட்டதென்றும் இருக்குமே யானல், அதைப் பற்றி உண்மைத் தமிழன் அழுவதா, சிரிப்பதா!

தமிழ் நாட்டுச் சமயாசாரியர் எனப் பெயர் வாய்ந்தவர்கள் சம்பந்தர், சுந்தரர், அப்பர், மணிவாசகர் இவர்களால் பாடப் பெற்றவை தேவாரம் திருவாசகம் முதலிய அருட்பாடல்கள். இப் பாடல்களைக் கொண்டு அனேக அற்புதங்களை நம் நாட்டில் இவர்கள் செய்து காட்டி யிருக்கிருர்கள். இறந்தவர் பிழைத்திருக்கிருர்; எலும்பு பெண்ணுருவாயிற்று: தீராத நோய் தீர்ந்தது; அக்கினி குளிர்ந்தது; ஆறு பெருகிற்று; இப்படி இன்னும் அனேகம். இவை யெல்லாம் தேவார திருவாசகங்களிற் சில பாடல்களைச் சொன்ன அளவிலேயே நடந்தனவாகும். அன்று முதல் இன்றளவும் அவ் வருட்பாடல்களில் உள்ளம் உருகாத தமிழனே இல்லை. ஆனல், வட மொழியைக் கொண்டு இத்தகைய அற்

புதங்கள் நமது நாட்டில் நடைபெற்றதாக இது வரையிற் காணோம்.

இங்ஙிலையில், தமிழ்நாட்டில் தமிழனுக்காக் தமிழனால் நடத்தி வரும் ஆலயங்களில் வடமொழி மந்திரங்களே சொல்லப்படுவதும்; வடமொழி வேதபாராயணம் நடந்த பிறகுதான் தேவார திருவாசக பாராயணம் நடைபெற வேண்டுமென்று ஒருசிலர் எதிர்வாதம் செய்வதும் நடை பெறுமேயானால், அதைப்பற்றி சொல்வதற் கென்ன இருக்கிறது?

சங்கீதத்திற்கு இசைவான எத்தனையோ தமிழ்ப் பாடல்கள் இருக்க, தமிழனுக்காக நடைபெறும் பாட்டுக் கச்சேரிகளிற் கூட் பாடகர் பிடிவாதமாக் பாடல்களை தெலுங்கிலும் கன்னடத்திலும் வட் மொழியிலும் பாடி வருவதிலும், சங்கீதத்திற்கு தமிழ் ஒத்து வராது என்று சிலர் பிரசாரம் செய்வதிலும் வியப்பென்ன இருக் கிறது!

எத்தனையோ அழகிய தமிழ்ச்சொற்களை யெல்லாம் வழக் கொழிந்து போகச் செய்து அந்த இடங்களிலெல்லாம் வட சொற் கள் குடியேறி யிருப்பதைப்பற்றியும், தமிழ்நாட்டில் நடைபெற்ற திருவிளையாட்ல்களை தமிழில் எழுதாமல் வடமொழியில் முதலில் எழுதிய வரலாற்றைப்பற்றியும், தமிழ் வளர்ப்பதையே நோக்க மாகக் கொண்டு தமிழ்ச் சங்கங்கள் அமைத்து, அதில் தாங்களும் உட்னிருந்து தமிழாராய்ச்சி செய்து வந்த பாண்டிய அரசர் பெயர்க ளெல்லாம் வடமொழிச் சொற்களில் அமைந்திருப்பதைப் பற்றி யும் ஆச்சரியப்பட என்ன இருக்கிறது?

இனி, தமிழ்ச் சங்கத்திற்குக் குரு பீடமாக இருந்த அகத்திய ரும் அவருடன் வந்த மாணக்கர்களும் வட நாட்டவர் தாமே என் கலாம். அது மெய்யே. ஆனால், அவர்கள் தமிழுக்குத் தொண்டு செய்தார்களே தவிர, தமிழைக் கொலை செய்ய வில்லை. சங்க காலத்துச் செய்யுள்கள் சிலவற்றில் தேடிப் பார்த்தால் எங்கேனும் ஒன்றிரண்டு வடசொற்கள், அதுவுந் தமிழோடு தமிழாய் ஒன்றி யிருக்கக் காணலாமே தவிர, இப்படி எங்கும் வடமொழி மயமாக் இருக்கவில்லை.

ஒரு மொழியில் மற்று மொழிகளிலிருந்து இசைவான சில சொற்கள் வந்து இடம் பெறுவதால் தவறென்று மில்லை யென்றா லும், இப்படியா இடம்பெற வேண்டும்? எங்கே, சங்கப் புலவர்க ளுடைய பெயர்களெல்லாம் வடமொழிப் பெயர்களாக இருக்கக் காணோமே. ஏதோ மிகச் சில மட்டுந்தானே அப்படி இருக்கின்றன.

இதை யெல்லாம் எண்ணிப் பார்க்கும்போது, இடங்கிடைத்த வரையில் வடசொற்களை தமிழில் நுழைப்பதையே நோக்கமாக வுள்ள ஒரு சிலரின் சூழ்ச்சி என்பதைத் தவிர வேறொன்றும் சொல்வதற்கில்லை.

---

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

(சி. பி. ஆனந்தம்.)



## 17 சனி உலகமும்—பல பாகமும்

செந்தழற் கோளமான சூர்யனை உலகத்திற்கு முதற் பொருளாகக் கொள்ளலாம். இதனைச் சுற்றி ஓடும் கோள்களுள் வருகின்ற சனிக் கிரகம் இருண்ட ஒரு கோளமாகும். இவை இரண்டும் வான மண்டலத்திலுள்ள ராசிகளில் சிம்மம்-கும்பம் என்னும் இவ்விரண்டையும் அவ்வவற்றின் ஆட்சி இடமாகக் கொண்டிருக்கின்றன. இந்த ராசிகள் இரண்டும் ஒன்றுக்கொன்று ஏழுக்கு ஏழாய் இருப்பன. இவ்விதம் ஏழுக்கு ஏழாய் இருப்பதை மை ஸப்தமங்கள் என்பர். பாவங்கள் பனிரண்டில் முதலாம் பாவம் ஜாதக்ருடைய நிலைகளையும்—ஏழாம் பாவம் அவருடைய லட்சியங்கள்—அல்லது குறிக்கோள்களையும் பற்றி விவரிக்கின்றனர். அதன்படி சூர்யனுடைய ஆட்சி இடமாகிய 'சிம்மம்' அதற்கு முதலாம் பாவமாய்—அந்த பாவத்தின் பலனை முதல்வனைப் பற்றிக் கூறினல், அதன் ஏழாம் பாவமான 'கும்பம்' அந்த முதல்வனுடைய லட்சியம்—குறிக்கோள்களைப் பற்றி விளக்கும். இவ்வழி, அந்த ஏழாம் இடத்திற்குடைய சனி, முதலாம் பாவனை சூர்யனுடைய லட்சியம்—குறிக்கோளாய், அவ்வழி வரும் பலன்களை நிகழ்த்துகின்றது என்னலாம்.

மேலை நாட்டு பலபாக சாஸ்திர நிபுணர்கள் ஒளி நிலைக்கு எதிரான இருள் நிலையின் பலன்களுக்கு உரியது சனிக் கிரகம் என்கின்றனர். உலகின் முதற் பொருளாக சூர்யனைக் கொண்டு, அதனை ஒளி முதல் என்று கூறுகின்றனர்.

எனவே, ஒளி முதலான சூர்யனுடைய லட்சியங்களில் பரிசுத்தமான பலன்களை சனிக் கிரகம் நிகழ்த்துகின்றதென கிழக்கிலும்—மேற்கிலும் கண்டிருக்கின்றனர் என்பதை நாம் நன்கு அறிகின்றோம். இந்த முறையில் சனிக் கிரகத்தின் பலன்களுக்குரிய ராஜ்யம் உலக மக்கள் மாட்டு மிகவும் முக்கியம் வாய்ந்ததாகும். ஏனெனில், அதன் பலன் வெறும் உற்சாகம்—ஊக்கம் இவைகளில் மட்டும் செல்வதில்லை. வெறும் உற்சாகம்—ஊக்கம் இவை அவற்றின் அதீத தாத்து வீணை மௌட்டியங்களுக்குச் செலுத்தி, பெரும் வீழ்ச்சிகளுக்கும் காரணமாய் நிற்பன. அத்தகைய முடிவுகளுக்கு இல்லாத வகையில் சனிக் கிரகத்தின் பலன்கள் அனைத்தும்—யாருக்கும் அவரவர் நிலைகளில் தூய்மைக்கே செலுத்துவதாக விருக்கும்.

வாயுவின் கூறு மிகுந்த சனிக் கிரக பலன்கள் உணர்வு எல்லையில் முக்கியங் கொண்டதாகப் பெரும்பாலும் இருந்து வரும். சாதாரணமாக் கெட்ட பலன்கள் என்பதை ஒருவர் தம்முடைய உடமைகள்—உயிர்கள்—வகிக்கும் பதவிகள் இவற்றிற்கு

நேரும் ஊறுகளே தான் என்று பொருள் எல்லையில் நாம் மதிக்கிறோம். ஆனால், மனம்—புத்தி இந்த அம்சங்களிலும் நேரும் நிலைகளைக் கொண்டே நல்லவை—கெட்டவை என்று கொள்ளுவதே சரியாக விருக்கும். உடைமைகள்—உயிர்கள்—பதவிகள்—முயற்சிகள் இவற்றில் ஏதாவது ஒன்று இரண்டிற்கோ அல்லது எல்லாவற்றிற்குமோ ஊறு நேரினும்—ஆக்கமே கூடினும் பலன் பெறுபவருடைய உணர்வைப் பொறுத்துத்தான் பலன் கெடுதல் என்றும், நல்லது என்றும் கூறலாம்.

முடி சூடும் சந்தர்ப்பம் ஒருவர் அதை இழந்து விடுகிறார்; மற்றொருவர் அதைப் பெறுகின்றார். இவர்கள் இருவரும் முறையே யாரும் மதிக்கும் துன்பத்தையும்—இன்பத்தையுமே பெற்றார்கள் என்று சொல்லக் கூடுமா? பட்டாபிஷேக முகூர்த்தத்தில் ஸ்ரீராமன் ராஜ்யத்தை விட்டகன்று ஆரண்ய வாஸத்தைத் தொடங்க வேண்டிய தாயிற்று. எதிர்பாராத ராஜ்ய ஸித்தி பரதனை வந்தடைந்தது. இவர்கள் இருவரும் பெற்றது முறையே கெடுதலும்-நன்மையுமா? அல்ல; அதற்குப் பதில் அவர்கள் இருவரும் முறையே மகிழ்ச்சியும்—சிந்தாகுலமுமே எய்தினர். இதெல்லாம் புராணத்தில் காண்பது. இன்று சரித்திரப் பதிவில் எட்டாம் எட்வர்ட் முடி துறந்ததும்—ஆறும் ஜார்ஜ் முடி ஏற்றதும் நாமெல்லாம் அறிந்தது. எனவே, ஒருவர் தாம் பெறுகின்ற பலன்களை எந்த நிலையில் உணருகின்றாரோ அந்த நிலையில் வைத்தே அந்தப் பலன்க நல்லவை—அல்லது கெட்டவை என்று கொள்ள வேண்டுமெ பது தெரிகிறதல்லவா! (தொடரும்.)

---

(475-ம் பக்கத் தொடர்ச்சி.)

மார்க்க சங்கம் ஒன்று காணவேண்டும்—இவை அவர் கூறுகின்ற வழிகள். இவ்வழிகளில் தமிழ் நாட்டினரை ஆற்றுப்படுத்தித் தமிழ்நாட்டை உயர்த்த அவர் இளைஞர்களையே நம்பி யிருக்கிறார். இளைஞர்களிடம் எப்போதும்—எந்த நேரத்திலும்—கலந்து கொள்வார். 'இளைய நண்பர்கள் இட்ட கட்டளை' என்று கூறி அவர்கள் சொல்லுகின்றபடி யெல்லாம் நடப்பார். இளைஞர் கூட்டும் கூட்டங்களில் அவர்களைவிட மிகுதியான ஊக்கத்தோடு கலந்து கொள்வார்.

அறுபதாண்டான முதியவரின் அநுபவமும், பதினாறாண்டான இளைஞனின் ஊக்கமும், ஆறு ஆண்டான குழந்தையின் களங்கமற்ற மனமும் படைத்த தலைவர் திரு. வி. க. தமிழ்நாட்டின் தவப்புதல்வர்; தமிழர்களுக்கு வழி காட்டும் பெருவிளக்கு: தமிழன்னையின் தொண்டர்; பெண்டிர்க்குத் தந்தை; இளைஞர்க்கு ஊக்க ஊற்று......இத்தகைய பெருமை உடையவர், திரு. வி. க.

திரு. வி. க. காணும் தமிழ்நாட்டு ஒற்றுமைக்கனவு மெய்யாக வேண்டும்: அதற்கு இளைஞர்கள் முன் வரவேண்டும். அவருடைய மனத்திலே உருக்கொண்டிருக்கும் சமரச சன்மார்க்க சங்கம் வருகின்ற ஆகஸ்டு மாதத்திலாவது புறத்தோற்றம் தரவேண்டும்.

திரு. வி. கலியாணசுந்தர முதலியார்க்கு வருகின்ற ஆகஸ்டு மாதம் 26-ஆம் தேதியோடு அறுபதாண்டு நிறைவுறுகிறது. தமிழர்கள் அவரைப் போற்றுவார்களாக.

# கர்ணனும் அர்ஜுனனும்

(து. ராஜகோபால்.)

(அர்ஜுனனின் அம்படிபட்டுக் கர்ணன் கீழே விழுகிறான். கர்ணன் தன்னுடைய அண்ணன் என்று கண்ணன் கூறியதும் அர்ஜுனன் ஓட்டோடியும் வந்து கர்ணனை மடியில் வைத்துக்கொண்டு அழுகிறான்.)

கர்ணன்:—யாரது? இவ்வளவு ஹிதமாகவும், அன்பாகவும் தடவிக் கொடுப்பது யார்? துரியோதனா! உன்னுடைய உப்பைத் தின்றதற்கு உழைத்து விட்டேன். என்னுடைய உடலின் சக்தி ஒடுங்கும் வரை யுத்தம் செய்தேன். அப்ப! நல்ல சமயத்தில் நீயும் வந்தாய். எனக்கு விடை கொடு. நான் வீரசொர்க்கம் செல்கிறேன்.

அர்ஜுனன்:—அண்ணா! இதோ பார். நான் துரியோதனன் இல்லை. உன்னுடைய தம்பி அர்ஜுனன்.

கர்:—யார்,? விஜயனா? என்னுடைய தம்பியா? ஹஹ......ஹா......ஹும். ஜன்ம சத்ரு என் தம்பி. சபாஷ்! நெருப்பும் நீரும் உறவு கொண்டாடுவதா! உன்னுடைய சத்ரு—ஜன்ம விரோதி. இதோ மரணப் படுக்கையி லிருக்கிறேன். இப்பொழுது உன் மனம் திருப்தி யடைந்திருக்குமே. உனக்கு இன்னும் என்ன வேண்டும்?

அர்:—அண்ணா! என்னை மன்னி. நான் பாவி. உலகம் இது வரை கண்டும் கேட்டுமிராத பெரியதொரு குற்றத்தைச் செய்து விட்டேன். நான் மஹா பாபி; அண்ணனைக் கொன்ற வன்கணன். யாரை நான் ஜன்ம சத்துருவாக மதித்தேனோ அவரே என் அண்ணன் என்பதைச் சற்று முன்தான் அறிந்தேன்.

கர்:—அண்ணன்! பகைவனிடமும் பாசம் காட்டுவதா? இல்லை. நீ என் தம்பியல்ல. நீ என் பகைவன். பரம சத்ரு. எனக்கும் உனக்கும் உள்ள உறவு அதுதான். ஹும்............இன்று காலை கூட யாரோ சொன்னார்கள். ஏன் உன்னுடைய தாய் குந்திதான் சொன்னாள். நானும் எனது ஜன்ம வைரியாகிய நீயும் ஒரே வயிற்றிற் பிறந்தவர்களாம். பாம்பும் கீரியும் ஒரு வயிற்றிற் பிறந்ததென்றால் யார்தான் நம்புவார்கள்? பொய். பொய். பச்சைப் பொய். நிஜமாகவே அப்படியிருந்தால் அது பிரம்மாவின் புத்திக் கோளாறே ஒழிய வேறில்லை. அப்படிப் படைத்த அவன் பைத்தியக்காரனே. நீ அரசகுமாரன். ஆனால் நானோ........நானோ வெறும் சாரதி மகன். சூத புத்திரன். அப்பா, மலையும் மடுவும் எங்காவது ஒன்று சேருமா? இதோ எமன் காத்திருக்கிறான். சத்ருவின் கையிலடிபட்டு வீரசொர்க்க மடையப்போகும் என் மனதை ஒரே ஒரு விஷயம் மட்டும் அரித்துக் கொண்டே யிருக்கிறது. எல்லையற்ற துக்கம் மனோவேதனை என் நெஞ்சை உறுத்துகிறது. யாரங்கே? விருஷகேது. சாரதி. ஒருவருமில்லையா?

அர்:—அண்ணு! இதோ நானிருக்கிறேன். நான் உன் தம்பி யல்லவா! கவலைப் படாதீர்கள். வீணுக அதைரியப்பட வேண்டாம். சாந்த மடையுங்கள்.

கர்:—சாந்த மடைவதா! சாந்தி......சாந்தி. எனக்கு சாந்தி என்பதுகூட உண்டா? அதோ! என் பிதா தன் கடமையை முடித்து விட்டு மேல்திசையில் மறையப் போகிருர். அதோ! அதோ! அவர் என்னையும் தன்னிடத்திற்கு அழைக்கிருர். என் கடமையும் முடிந்து விட்டது. சாந்த மடையப் போகிறேன். எல்லையில்லாத பரம சாந்தியில் மூழ்கப் போகிறேன். உலகத்தில் இனி உனக்கு விரோதியே கிடையாது. இனி நீயே ஒப்புயர்வற்ற வீரன். உலகமே உன்னுடையது தான். உலகம் உன்னைக் கண்டு நடுங்கும். உன் சூர தீர பராக்கிரமத்தைக் கண்டு உன்னைப் புகழும்........ஹா-ம். கோபமா? எனக்கு உன்னிடத்தில் என்ன கோபம்? பொருமை, பொருமையுமில்லை. விரோதபாவம்கூட லவலேசமும் கிடையாது. நான் உன்னுடைய சகோதரன். நான் உன்னிலும் பெரியவன். இதோ ஆசீர்வாதம் செய்கிறேன். உனக்கு சர்வ மங்களமு முண்டாகட்டும். வெற்றிவீரனுகத் திகழ்வாயாக. நான் மரணத்தின் முகப்பை யடைந்து விட்டேன். எனக்கு விடுதலை கிடைத்து விட்டது. இனி நான் அமரன். ஆனுல் என் மனோ வேதனை மட்டும்....................

அர்:—என்னிடம் சொல்லு; அண்ணு! என்னிடம் சொல்லுவதால் கட்டாயம் தங்கள் வேதனை கொஞ்சம் குறையும்.

கர்:—குறைவதா! ஹா-ம்; அது என்னைச் சுவர்க்கத்திலும் விடாது. மனதிலே மறைத்து வைத்திருந்த வேதனையை இன்று வரை வேறெருவரிடத்திலும் கூறியதில்லை. ஆனுல்......தம்பி. இன்று உன்னிடத்தில் கூறுகிறேன். தனஞ்சயா! என்னுடைய இந்த சரீரம் எவ்வளவு அவமானத்தைச் சகித்திருக்கிறது, தெரியுமா? வாழ்வின் ஒவ்வொரு படியிலும் அவமானமும், திரஸ்கார முமே காத்திருந்தது. க்ஷணத்துக்கு க்ஷணம் வேதனை. எனக்கு மட்டுமா இந்த அவமானம்? இல்லை. பெற்றெடுத்த தாய்க்கும் என்னுல் அவமானம். பாவம். அவமானத்திஞலும், லஜ்ஜையினுலும் புத்திரனைக்கூட இழக்கத் துணிந்தாள். என்னைப் பெட்டியில் வைத்து ஆற்றில் விட்டபோது அவள் மனம் என்ன பாடு பட்டிருக்கும். மாத்ரு வாத்ஸல்யத்தை மருந்துக்கும் பெருத பதிதன். பாலப்பருவம் நீங்கி வாலிபப் பருவம் அடைந்த பிறகாவது சுக முண்டா? என்னுடைய சரீரத்தின் ஒவ்வொரு அணுவும் க்ஷத்திரிய ரத்த■தால் வீர்யமடைந்து வில் வித்தை பயிலத் துடிதுடித்தது. துரோணரை யண்டி சிட்சை வேண்டினேன். சூத புத்திரனுக்கு நான் வித்யா தானம் செய்ய மாட்டேனென்று கூறி என்னை மறுத்தபோது என் உள்ளம் அவமானத்தாலும், வெட்கத்தாலும் குன்றி விட்டது. அவருடைய முகத்தில் தோன்றிய வெறுப்பு இன்னும் என் மனதை விட்டகலவில்லை. அர்ஜுனு! அந்த நிலையை உன்னுல் கற்பனை செய்துகூட பார்க்கமுடியாது.

நீ ராஜகுமாரன். ஏழைகளும், தொழிலாளிகளும் படும் துயரமும், வேதனையும் நீ அறிய மாட்டாய். பிறகு நடந்தது தான் உனக்குத் தெரியுமே. பரசுராமரை அண்டி சிஷ்யனானேன். என்னுடைய துரதிர்ஷ்டம் அங்கும் என்னை விடவில்லை. நான் க்ஷத்திரியனென்பதை யறிந்த என் குரு கொண்ட கோபம் இவ்வளவவ்வளவல்ல. அவர் கொடுத்த சாபம் பேரிடியென என் வித்தையைப் பற்றியது. "உன்னுடைய வித்தை எதிரியின்முன் வியர்த்தமாகக் கடவது." அப்பா உயிரைவிடச் சிறந்த வித்தையை இழப்பதென்றால் யாருக்குத்தான் மனம் சகிக்கும்? இதற்குத்தானா இவ்வளவு கஷ்டம்? மானவமானத்தை மூட்டைகட்டி வைத்துவிட்டுப் பொய் சொல்லவும் துணிந்தது இதற்குத்தானா? வருஷக்கணக்காக பட்ட சிரம மனைத்தும் ஒரு விநாடியில் பாழாயினவே.

உனக்கு ஞாபகம் இருக்கிறதா! அன்றொரு நாள் அஸ்திர பரீட்சை நடந்ததே. நான் உனக்கு எதிராக நின்றேன். ஜனங்கள் என்னை தேர்ப்பாகனின் புத்திரன் என்று கூறி இகழ்ந்தார்கள். துரியோதனன் மட்டும் தன்னுடைய பெருந்தன்மை காரணமாக என்னைப் புகழ்ந்தான். நான் என் திறமையை, என் சாமர்த்தியத்தைக் காட்ட எழுந்தேனோ இல்லையோ, அரண்மனையில் யாருக்கோ மிகவும் உடம்பு சரியில்லை என்ற செய்தி வரவே, சபை கலைந்து விட்டது. குரு சாபம் வீண் போகவில்லை. என்னுடை திறமை சமயத்தில் வியர்த்தமாகி விட்டது. மனதிலெழுந்த ஆசை மடிந்து மண்ணோடு மண்ணாயிற்று.

அர்:—அண்ணா! நடந்ததைக் குறித்து வீணாக வருத்தப் படுவானேன்! சென்றதை நினைத்தால் எனக்கே வெட்கமாயிருக்கிறது.

கர்:—சென்றது சென்றதுதான். ஆனால் அதன் அழியாத சின்னம் ஆளை வதைக்கிறதே. வாழ்வு முழுவதும் விதியுடன் போராடினேன். கடைசியில் விதியின் எதிரில் தோற்றும் விட்டேன். தம்பி! இது மட்டுமா? கடைசிவரை விதி சதி செய்தே விட்டது. துரோபதியின் சுயம்வரத்தன்று நான் பட்ட அவமானம். மச்சத்தை யறுத்து மங்கையை மணக்க எழுந்தேன். ஆனால் மணமகள் கூறிய வார்த்தைகள் என் ஹிருதயத்தில் ஈட்டியெனப் பாய்ந்தது. அவள் கூறினாள்: "இந்த சூத புத்திரனா என்னை மணப்பவன்?" அவளுடைய குரலில் தொனித்த வெறுப்பும், திரஸ்காரமும் என் சக்தியையே உறிஞ்சி விட்டன. கை தானாகத் தாழ்ந்தது. குனிந்த தலை நிமிராமல் வெளியேறினேன். கூண்டிலடைபட்ட சிங்கம் எதிரில் கூண்டுக்கு வெளியிலிருக்கும் ஆட்டைக் கண்டும் அதைக் கொல்ல வகையின்றிக் கோபத்தை யடக்கிக் கொண்டு படுத்து விடுவதுபோல, நானும் என் கோபத்தை யடக்கிக் கொண்டேன். மானமுள்ள மனிதனுக்கு இதைவிட வேறு என்ன அவமானம் வேண்டும்?

அர்:—அண்ணா! நாம் என் செய்வது? மனிதன் விதியின் விளையாட்டுப் பொம்மை. விதி ஆட்டுகிறது. நாம் ஆடுகிறோம். அவ்வளவு தான்.

கர்:—விதி. விதிதான் இன்றும் என்னை மோசம் செய்தது. சூர்யாஸ்தமனத்திற்குள் பரமவைரி பார்த்தனைக் கொன்று வெற்றி மாலை சூடி விண்ணையும் முட்டும்படி வெற்றி முழக்கம் செய்வதாக இன்று காலை தான் பிரதிக்ஞை செய்தேன். அடுத்த நிமிடம் என் முன் குந்திதேவி நின்றிருந்தாள். நான் என் கண்களையே நம்பமுடியவில்லை. உண்மையில் நான் அவள் புத்திரனென்று கூறியபோது என்னையு மறியாமல் என் உள்ளம் பூரித்தது. என் மேலிருந்த பழி நீங்கிவிட்டது. நான் இனி சூத புத்திரனில்லை. நானும் உலகத்தில் தலை நிமிர்ந்து நிற்கலாம். அரசவம்சத்தின் ரத்தம் என் உடம்பிலும் ஓடுகிறது. ஆனல் அடுத்த க்ஷணம் என் உள்ளம் உடைந்தது. என் பிரதிக்ஞை என்னுவது? உப்பிட்ட வரை உதறிவிட்டுப் போவது தருமமா? மந்திரத்திற் கட்டுண்ட நாகம்போல் நான் யுத்தகளத்தை யடைந்தேன். என்றுமில்லாத வீரத்துடனும், உற்சாகத்துடனும் யுத்தம் செய்தேன் நான். யுத்தகளத்திலே ஒரு பிராமணன் என் உயிருக்கும் உயிராகிய கவசத்தை யாசித்தான். பதில் பேசாமல் அதை அவன் கையில் கொடுத்தேன். கொஞ்ச நஞ்ச மிருந்த ஆசையிலும் மண்விழுந் தது. ஆனலும் தைரியத்தைக் கைவிடாமல் யுத்தம் செய்தேன். என் வில் திறமையினல் எத்தனை தடவை உன்னை பிரமிக்க வைத் திருக்கிறேன். பாம்பின்கால் பாம்பறியும். வீரனை வீரனே அறி வான். என்னுடைய சாமர்த்தியம், என்னுடைய வல்லமை எல் லாம் சமயத்தில் வியர்த்தமாகி விட்டது. விதி உன்னுடைய ரதத்தின் சக்கரத்தை மண்ணில் ஆழ்த்தியது. தவருத குறியும் தவறியது. தலையும் தப்பியது. ஆனல் அர்ஜுன, விதி மட்டும் சமயத்தில் சதிசெய்யாம லிருந்தால் நான் இத்தனை நேரத்தில் இப்பரந்த உலகின் ஏக சக்கிராதிபதியாகி யிருப்பேன். ஏமாற்றம். ஏமாற்றம். வாழ்வு முழுவதுமே ஏமாற்றம். உலகின் எந்தப் பக்கத்திலும் ஏமாற்றமே எதிர் கொண் டழைக்கிறது. என் வாழ்க்கையே ஏமாற்றப் புதையல் போலும். விதியின் சாபமே உருவாகி வந்தது போலும். என் வாழ்க்கை கீர்த்தியின்றிக் காலம் கழிந்தது. மாதா இருந்தும் மாத்ரு வாத்சல்யத்தை அநுபவிக் கக் கொடுத்து வைக்கவில்லை. குருவைப் பெற்றேன். ஆனல் அவருடைய ஆசீர்வாதத்தைப் பெறவில்லை. வித்தையை அடைந்தேன். ஆனல் புகழை யடையவில்லை. வெற்றி என்பது சற்றேனும் இல்லை. வியர்த்தம். வியர்த்தம். வாழ்வே வியர்த்த மாயிற்று. பிரகாசத்தைப் பெற்றும், போற்றப்படாமல் வெறுக் கப்படும் வால்நட்சத்திர மாயிற்று என் வாழ்க்கை. சகோதரா! குல மரியாதை உன்னைக் கௌரவித்தது. அம்மாவின் மடியில் ஆனந்த மனுபவித்தாய். சென்றவிட மெங்கும் சிறப்பு உன்னைத் தேடிவந்தது. வெற்றிவீரன் விஜயன் என்று பேர் படைத்தாய். நான் பெரியவன் தான். ஆனலும் புகழ் உன்னைத்தான் தேடி யடைந்தது. இகழே எனக்கு ஆபரண மாயிற்று. என்னுடைய இந்த சரீரத்தோடு என் பெயரும் மறைந்து விடும். அதைப் பற்றி நான் கவலைப்பட்ட வில்லை. ஆனல் அந்த மனோ வேதனை

# விதியின் போக்கு

(கார்த்திகேயன்.)

திரிகோண பர்வதத்தின் சரிவு ஒன்றிலே அடர்ந்த பெரிய காடு. அதில் தங்கி யிருந்த சைன்யத்திலே குமார் ஒரு ராணுவ தளகர்த்தன். பட்டாளத்தில் அவன் தாக்கானபோது அவனுக்கு வயது 20. கன்னிகை ஒருத்தி கைபிடித்து சரியாக மூன்று மாதங்கூட ஆகவில்லை. அதற்குள் குண்டுகளுடன் பரிச்சயமாக வந்து விட்டான். வந்து வருஷமும் இரண்டு ஓடி விட்டது.

வறண்ட ஆற்று மணலில் ஒருநாள் வேடிக்கையாகப் பேசிக் கொண்டிருந்ததன் விளைவு இது. இல்லாவிட்டால் அவன் வாழ்க்கைப் பாதை ஒரு மனோகரமான இன்ப லோகத்தில் 'சஞ்'சரித்துக் கொண்டிருக்கும். என் செய்வது? எல்லாம் ஊழ்வினை- விதியின் விபரீதம்! அவனை இந்த அபாய வாழ்வில் சிக்க வைத்தது!

காட்டுக்கு வெளியே நல்ல நிலவு. மலை யுச்சியையும் அப்பாற் கிடந்த சரிவு அடிவாரங்களையும் ஒரே மட்டமாகக் காட்டுகிறது. காட்டினுள் கூட நடுநடுவே சிட்டி சிட்டியாக நிலா வெளிச்சம் மரக்கிளைகளி னிடையே வந்துகொண் டிருந்தது.

இராணுவத்தில் குமாருக்கும் அவன் சேனைக்குந்தான் நல்ல பேர். இரு அபாயகரமான சமயங்களில் அவன் தன் வீரர்களுடன் மிகச் சாமர்த்தியமாக போர் புரிந்து வாகை சூடி யுள்ளான். என்றாலும் இடை யிடையே அவன் மனத்திரையிலே வந்து காட்சி தரும் அந்தச் சுந்தர முகத்தை அவனால் மறக்க முடியவில்லை. மூன்று மாத வாழ்க்கையில் வார்க்கப்பட்ட அந்த மோகனச் சித்திரம் அந்த யௌவன பிராயத்தில் எவ்வாறு அழிக்கப் பெறும்?

இன்று அந்த வேதனை மிகுந்தது. ஆறுமை பெருகிற்று. அமைதி காண முடியாமல் தவித்தான். மெதுவாக எழுந்து பாறை யுச்சியை நோக்கி நடந்தான்.

மொழு மொழுவென்றிருந்த ஒரு கல்லின் மீது உட்கார்ந்து கொண்டு வானத்தையும், சந்திரிகையின் வனப்பையும், லோகத்தின் அமைதியையும் ஒரு கணநேரம் கவனித்தான். அவ்வளவு

---

லஜ்ஜை, அவமானம் இவைகளை மட்டும் என்னால் மறக்கவே முடியாது. சரி. போனது போகட்டும். மறு உலகத்திலாவது உண்மைச் சகோதரர்களாக இருப்போம். உன் மனதிலுள்ள துவேஷம் மறையட்டும். தம்பி, நான் போகிறேன். வெற்றி வீரனாக உலகில் நீடூழி காலம் வாழ்வாயாக.

தான்; அதன்பிறகு அவன் குரங்கு மனம் அவனை எங்கெல்லாமோ இழுத்துக்கொண் டோடிற்று.

அந்தநாள்!—அவன் விதியின் தேர் நெறி தவறிச் சென்ற நாள்!—ஆற்று மணலில் நண்பர்கள் பலருடன் உரையாடி யிருந்தது, அவர்களில் ஒருவன் பட்டாளத்தில் ஆள் எடுப்பதைப் பறை யடித்தது, ராணுவத்தில் சேர்வதால் சீரும் செல்வமும் மிகும் என இன்னொருவன் நவின்றது, மற்றொருவன் குமார் நல்ல தேகக் கட்டுள்ள ஆஜானுபாகு! வெகு சீக்கிரத்தில் கம்மாண்டர் பதவி கிட்டும் என்று அவனுக்கு ஆசை யூட்டியது, அவனாவது மிலிட்டரியில் சேரவாவது!—புது மனைவியை விட்டுட்டு! என்று வேறொருவன் கேலி செய்தது, அப்படி நம்ப குமார் சிலரைப்போல சம்சாரப் பித்தனல்லடா என்று இன்னொருவன் எதிர்வாதஞ் செய்தது, அதன் பிறகு நடந்த கடுமையான வாதப் பிரதிவாதங்கள், முடிவில் குமார் பட்டாளத்தில் சேர்ந்தது......பின்னர் சில மாதங்களில் கம்மாண்டர் பதவி கிடைத்தது.........

இப்படி ஆரம்பம் முதல் சுற்றித் திரிந்த அவன் சிந்தை இறுதியில் அந்த அபலை மீது கவிந்து நின்றது.

“அந்தோ! என் பிரிய சாந்தா! இப்போது நீ தன்னந் தனியே என்ன செய்கிறாய்? மாடி யறையில் சாளரத்தின் வழியே பொழியும் நிலவைப் பார்த்து ஏங்கித் தவிக்கிறா யல்லவா? என்னையே நினைந்துருகும் உன் பேதை மனமும்! நான் சைன்யத்திற் சேர்ந்தேன் என்ற செய்தி உனக்கு எட்டியதே அந்தக் கபடமற்ற உன் இருதயம் என்ன பாடு பட்டதோ? குண்டுகளும், வெடிகளும் குறுக்கும் நெடுக்குமாகப் பாயும் யுத்த களத்திலே கூட என்னால் உன்னை மறக்க முடியவில்லையே! அமைதியான வீட்டிலே தன்னந் தனியே வசிக்கும் நீ என்னை எவ்வாறு மறந்து வாழ்வாய்?

“ஐயோ! அந்த மூன்றுமாத கால வாழ்வில் நீ என்னிடங் காட்டிய அன்புதான் என்னே! நான் வெளியே சென்று திரும்புவதற்குள் எத்தனை முறை அந்தத் திண்ணைக்கும் உள்ளுக்குமாக என் வருகையைத் தேடி நடந்திருப்பாய்! என்னை இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருப்பதில்தான் உனக்கு எத்தனை ஆனந்தம்! என் உடைகளை அழகாய் எடுத்து எனக்கு அணிவிப்பதில் தான் உனக்கு எவ்வளவு ஆசை!

“ஆ! நீ என் மாடியறைக்கு வந்து நிற்கும் அழகை நான் எவ்வாறு மறப்பேன்! கறுத்து நீண்ட பின்னற்சடையை முன்னே இழுத்துப் போட்டுக்கொண்டு நீலப்புடவையின் முன்தாணியை ஒரு கையால் பற்றிய வண்ணம் முகத்திலே புன்னகை தவழ மான்விழிகளிலே குறும்பும் குதூகலமும் கொந்தளிக்க என் தோளருகே மருவி நிற்கும் அந்த ஒய்யாரம் என்ன லேசானதா?

“என் கரங்களுக்கிடையே புகுந்துகொண்டு நீ அடிக்கும் கொட்டம்!...எத்தனை ஆட்டம்! எத்தனை நீட்டாப்பு! எத்தனை குலுக்கு; எத்தனை நெளிப்பு!......”

குமார் தன்னை மறந்து தன் இரு கைகளையும் முன்னே நீட்டினான். "சே! இது என்ன பைத்தியம்!" என்று வெறும் வெளியிலே நீண்ட தன் கரங்களை பெரும் ஏமாற்றத்தோடு மடக்கிக் கொண்டான்.

நெடுநேரம் அந்த மோக நினைவுடன் போராடித் தளர்ந்து போனான். சந்திரன் மேற்கே சாய்ந்த பிறகே எழுந்து தன் கூடாரத்தை நோக்கி மெதுவாக நடந்தான். அப்போதும் அதே சிந்தனை தான்.

"அவளுக்கு எத்தனை கடிதங்கள் எழுதினேன். அவை எப்படியும் அவளுக்கு ஆறுதல் அளிக்கும்!...ஆனால் அவள் ஏன் எனக்கொரு கடிதம் கூட எழுதவில்லை? நான் ஊரினின்றும் புறப்பட்டபோது அவளிடம் சொல்லிக் கொள்ளவில்லை என்ற கோபமாயிருக்கலாமோ! சே! இராது! என்னைக் காணாத ஏக்கம் அவளை வருத்திக் கொண்டிருக்கும்போது எனக்குக் கடிதம் எழுதுவதைப் பற்றி அவள் எங்கே சிந்திக்கப் போகிறாள்?.........இன்னும் ஒரு வருஷம் எப்போது தொலையுமோ?......"

அவன் பட்டாளத்தில் சேர்ந்த சில மாதங்களிலே ஊரில் பரவிய காலரா என்ற கொடிய நோய்க்கு சாந்தா இலக்காகி பூவுலக வாழ்வை நீத்து விட்டாள். அவன் எழுதிய தபால்கள் அனைத்தும் பூட்டப்பட்டுக் கிடந்த அவன் வீட்டினுள் குப்பையோடு குப்பையாகக் கிடந்தன என்பது அவனுக்கு எப்படித் தெரியும்?

அவன் காட்டை நெருங்குஞ் சமயம். திடீரென மலையே அதிரும்படியான ஒரு குண்டு அவனுக்கு உச்சியிலுள்ள வானவீதியைக் கடந்த சென்றது. அவன் விரைந்து நடந்தான். அடுத்த சில நிமிஷங்களில் இன்னொரு பலத்த ஓசை!—இன்னுஞ் சற்று கீழாக ஒரு குண்டு பாய்ந்து சென்றது. அப்பால் அடுத்தடுத்து பல குண்டுகள் அதி விசையுடன் அலறிக்கொண்டு பாய்ந்தன.

சேனை முழுதும் விழித்துக்கொண்டது. குமார் உத்திரவை எதிர்நோக்கி நின்றனர் வீரர் அனைவரும். அவன் கூடாரத்தைக் குறுகிய அதே சமயம் ஒரு பேய்க்குண்டு அவன் நெஞ்சைப் பிளந்து சென்றது. அப்போது இலைகளினிடையே வந்த நிலவொளிக் கற்றை யொன்று அவன் முகத்தில் வீசியது. தன் ஆருயிர்ச் சாந்தாவைத் தழுவும் ஆனந்தம் அவன் முகத்தில் விளையாடியது.



# கார் தங்கி நின்ற கொடி

(வீ. செல்வராஜ்.)



கங்கைக்கரையை யொட்டிய ஒரு சிறு குன்றிடம். அது சந்திரகாந்தக் கற்களா லாக்கப்பட்டதுபோல் ஒளி பொருந்தி யிருந்தது. அப் பாறைக் கற்கள் மேடு பள்ளங்களுடன் அமைந்திருந்தது. திங்கள் ஒளியிலே சந்திரகாந்தக் கற்களைப்போற் காணப்பட்டது அதிசய மானதல்ல. இடையிடையே காணப்பட்ட அச் சிறு சிறு பள்ளங்களிலே தண்ணீர் தங்கி யிருந்தது. கார்காலத்திலே இது மிகவும் சகஜமே. நீர்த்திவலைகள் பளிங்கு போன்று சந்திர கிரணங்களைத் தாராளமாகப் புக விட்டதின் காரணமாய் நீர் நிறைந்த அச்சிறு பள்ளத்தின் அடிப்பாகம் அப்படியே பிரதிபலித்துக் கொண்டிருந்தது. அந்நீர்த் திவலைகளின் குளிர்ச்சிக்கும் பளிங்கு போன்ற தன்மைக்கும் களங்கமற்ற—காதலால் தாக்கப்படாத பேதைப் பெண்ணின் உள்ளத்திற்கு ஒப்பிடாமல் வேறு எதற்கு ஒப்பிடுவது ?

அச் சிறுநீர் நிலையிலே ஒரு சிறு பசுங்கொடி வளர்ந்து ஆடிக்கொண்டிருந்த தன்மையை எவ்வாறு வருணிப்பது? அது அப் பளிங்கு போன்ற நீரை உண்டு வளர்ந்த கொடி யென்று சொன்னாற் பொருந்தாது. அந்நீரின் பளிங்கு போன்ற ஒளியையும், அதன் குளிர்ச்சித் தன்மையையும் உண்டு வளர்ந்து—மெல்லென வீசும் தென்றற்காற்றிலே ஜிலுஜிலென நடனமாடும் பசுங்கொடி யென்றே சொல்லவேண்டி யிருக்கின்றது. இப் பசுந் தண் கொடியைக் கண்ட எவனும் இதை ஒரு இளம் பெண்ணிற்கு உவமையாகச் சொல்லாமலிருக்க முடியாது. அவன் ஒரு கவிஞனா யிருந்து விட்டால்-ஒரு இளம் பெண்ணிற்கு மட்டுமல்ல-அவள் அறியாதிருக்கும்போதே காதலுணர்ச்சி உட்சென்று—அதை அவள் இன்னதென அறியாது—அதனால் அவள் வருந்தாது புளகாங்கித மடைந்து, இதுவோர் இன்ப மெனக் கொண்டு, தன்னை யறியாமலேயே பூரித்து மிளிரும் ஒரு இளம் பெண்ணிற்கே கட்டாயம் ஒப்பிடுவான். அவ்வளவு வசந்தமான தன்மையிலே அப் பூங்கொடி தென்றலிலே ஆடிக்கொண் டிருந்தது.

இவ்வளவையும் அவ் வெண்ணிலவிலே கண் கொட்டாது எங்கோ வேகமாகச் சென்று கொண்டிருந்த அத் தவயோகி—திடுக்கென நின்று வெகு நேரமாகப் பார்த்துக் கொண்டிருந்தார். அவர் தவயோகி மட்டுமல்ல, ஒரு கவிஞர் என்பதும் அதிலிருந்து தெரிந்து கொள்ளலாம். இமயமலைச் சாரலில் தவஞ் செய்து திரும்பி வரும் அவர் இதை இவ்வளவு நேரம் உற்றுப்பார்க்க அவசிய மில்லைதான்! எனினும் அவர் ஒரு கவி யல்லவா! எப்படி இதை மறக்க முடியும்? ஆயினும் அவ்விடத்தை விட்டுப் போக மனமில்லாதவர்போற் சென்றார்.

குளிர்காலம் போய்விட்டது. இளவேனிற் காலமும் கடந்து முதுவேனிற் காலமும் வந்துவிட்டது. இவ்வளவு நாட்களும் புத்த மத விதிப்படி போதப் பிரசாரம் செய்துவிட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்தார். குளிர்காலத்தைக் கடத்திய அவர் வேனிற்காலத்திலே இமயமலைச் சாரலிலே சென்று மறு குளிர் காலம் வரும் வரை தவமேற் கொண்டிருப்பதுவே அவரின் எண் ணம். அத் தவ எண்ணமே அவ்ரின் இதயத்தை நிரப்பி யிருந் தது. தன் உள்ளத்தை யெல்லாம் அதிலே லயிப்பித்துக் கொண்டு வந்த அவர் அதே இடத்திற்கு வந்ததும் சட்டென நின்று விட்டார்.

உலக மாயை அனைத்தும் வென்று தூய மனத்தினரான அவருக்கும் அக் காட்சியைக் கண்டவுடன் மனம் உருகி விட்டது என்றால் மானிடர்களுக்கு எவ்வாறிருக்க முடியும்? அதே பாறை கள்; அதே பள்ளங்கள்; ஆனால் முதுவேனிற் காலம்; மேலே கொடிய சூரியன் பிரகாசிக்கிறான். அப் பள்ளங்கள் ஒன்றிலாயி னும் தண்ணீர் கிடையாது. வற்றி யுலர்ந்து போய்விட்டன. அதைப்பற்றி நமக்கென்ன கவலை! ஆமாம். அந்தப் பசும் பூங் கொடி என்னாயிற்று என்பதுதான் நம் ஆவல். அப் பூங்கொடி யின் தற்போதைய நிலையைக் கண்டுதானே அத் தவயோகியின் உள்ளம் அவ்வாறு வருந்தியது! அக் கட்டாந்தரையான பாறையிலே—வற்றி யுலர்ந்த பள்ளத்திலே—அப் பூங்கொடி எவ் வாறிருக்க முடியும்? பசுமை நிறம் போய் வெளுத்து உயிரற்றுத் தோன்றியது. குளிர்ச்சி போய் வெய்துயிர்த்து நிற்பதற்கும் சக்தி யற்றுச் சாய்ந்து தொங்கியது.

அத் தவயோகி கவிஞரல்லவா! முன்னை தன்னை யறியாது ஏதோ ஒரு உணர்ச்சி தன்னுட் புகுவதையும் அறியாமலேயே அதை அனுபவித்துப் புளகாங்கித மடைந்து பூரித்திருந்த அதே இளம் பெண்—அவ்வுணர்ச்சி காதல் என்று அறிந்து, அக்காதல் நிறைவேறுவதற்கு வழி யில்லாது தவித்து, முன்னே குளிர்ச்சி யெனப்பட்ட அதே காதலுணர்ச்சி, தற்போது தன்னை நெருப் பைப் போல் எரிக்க, தத்தளித்துக் குழைந்து மலர் போன்ற வத னம் வாடி வதங்க, உதடு உலர, நாக் குழற, குழல் குழைய, தன் பொன்மேனி இரத்த மற்று வெளுத்து விட, நிற்கவும் சக்தியற்று ஒடிந்து நிற்கும் பரிதாபக் காட்சி அவர் முன்னே அப் பூங்கொடி நின்ற இடத்திலே பிரதிபலித்துக் கொண்டிருந்ததைக் கண்டார். மனம் உருகினார்.

மனவேதனையோடு, அவருக்கு ஒரு சிறு ஆறுதலு மேற்பட் டது. தான் எழுதிக் கொண்டிருக்கும் காவியத்திலே கதாநாயகி, கதாநாயகனைக் கண்டதும் காதலுற்று வேதனைப்பட்டுக் கொண் டிருக்கும் கட்டத்திற்கு இக் காட்சி மிகவும் உதவி செய்தது என்ற போது அவருக்கு ஒரு ஆறுதல். உடனே தன் கையிலிருந்த

(496-ம் பக்கம் பார்க்க.)

# " தமிழில் மறுமலர்ச்சி "

("தமிழ்ப் பித்தன்.")

வள்ளுவர், கம்பர், வள்ளல், சேக்கிழார்,
தொல்காப் பியர்,பவ ணந்தி முனிவர்,
ஆழ்வா ராதியர், அகத்தியர், அவ்வை,
இளங்கோ, சாத்தனார், கீரனார் போன்ற

எண்ணரும் புலவர் இயற்றிய பாடல்கள்
மிளிர்ந்து மாந்தரின் மிடியாம் மம்மரை
அறுத்து அகவொளி பரப்பிய நாட்டில்
"கடின வசனம் கனவிலும் வேண்டாம்.

பண்டித நடையும் பல்லை உடைக்குதே!
பிறமொழிப் கலப்பும் கொச்சையும் தமிழில்
அபரி மிதமாய் அளவில் லாமலே
கலந்தா லன்றித் தமிழ்த்தாய் வளராள்.

'வாழை பழம்' எனச் சந்தி நீக்கலும்
'பால்க்கடல்' எனப்பதம் புணர்த்தலும் சரியே.
இவ்வா றெழுதுதல் இன்றமிழ் மலர்ச்சியாம்.
தொல்காப் பியத்தையும் நன்னூல் தன்னையும்

ஏனைய இலக்கண நூல்கள் தம்மையும்
எரியும் அடுப்பிலே எறிந்து பொசுக்குமின்
பண்டித நடைச்'சிலப் பதிகா ரத்'தை
ஓடும் நதியில் உவப்பாய் வீசுவீர்!

இலக்கண மெல்லாம் விளக்கெண் ணெய்யே.
அவற்றைப் படித்தல் அவமே யாகும்.
இலக்கண மின்றி எளிதில் உணரும்
தாறுமா றான தமிழே இலக்கியம்"

என்றுவீண் வாதம் இயற்றித் திரிந்து
எந்தமிழ்த் தாயின் இனிய கற்பினை
மாசு படுத்தி மகிழ்ச்சி யடையும்
வம்பர் பெருத்து வாழ்கின் றனரே!

# இனியோர் தெய்வம் தொழேன்

(P. N. வைத்தியநாத சுவாமி. B. SC.,)

நேற்று வரையிலும் இருந்த கொள்கை ஒன்று; ஆனால் இன்று அது மிக மோசமானதென்று தோன்றுகிறது. புது கொள்கையில் மனம் புகுகிறது. இப்படி வந்தடைந்தும் நன்மையற்றதென்று நாளை எண்பிக்கப் படலாம் போலும்!

பரம பக்தனாக இருந்தேன்; ஒவ்வோர் மூச்சிலும் பேச்சிலும் அவனை உணர்ந்து வந்தேன். ஆனால், இன்று என் மனம் அடியோடு மாறிவிட்டது. மெல்லிய என்னுள்ளம் கல்லாகி விட்டது; கடும் பாரையான அது **இனியோர் தெய்வம் தொழேன்** என்கிறது.

* * * * *

வான் மழையில்லா பயிர்போல் வளர்ந்தேன். பரந்த புகழ் என் குடும்பத்திற் குண்டு; சிறந்த செல்வச் செருக்குண்டு! ஆனால் தந்தை தாயற்ற பாவியானேன் சிறுவயதிலேயே. தனக்குக் குழந்தை இல்லா குறைபற்றி என் அத்தையே என்னை வளர்த்து வந்தாள். **அப்பா என்ற சொல் அருமை; அம்மா என்ற சொல் அதனிலும் இனிமை; ஆனால் பாவி நான், முற்பிறப்பில் செய்த வினையோ, இரண்டிலொரு இன்பத்தையும் எள்ளளவும் அறியேன்.** தந்தையோடு கல்வி போகுமாம்; தாயொடு அறுசுவை உணவு போகுமாம்; ஆனால் தந்தையும் தாயுமாக அமைந்த என் அத்தை எனக் கிரண்டையும் அளித்து வந்தாள். வயதாக ஆக, என் தனிமையைத் தானாக உணரத் தலைப்பட்டேன். அப்பா என்று யாராவது அழைக்கும்போது அச் சொல் ஓர் வித அனலை என் நெஞ்சில் எழுப்பும். இவ்விதப் பாவியாக என்ன குற்றம் செய்தோம்; ஆனதால் இனியோர் **தெய்வம் தொழேன்** என்று என்னுள்ளம் கல்லாகிறது.

* * * *

பத்து வயதில் அவள் பக்கலில் நான் வந்தது. அப்பொழுது அவள் வயது எட்டு. நன்றாய் வளர்ந்தோம்; நன்றாய் படித்தோம்; நன்றாய் உண்டோம்; நன்றாய் படுத்தெழுந்தோம்; **நன்றாக எப்பொழுதும் இருந்தோம் அன்பும் சிவனும் இரண்டறக் கலந்ததுபோல,** பருவகால மடைந்தோம். வயதிற்குரிய காதல் அலை தானாக எங்கள் நெஞ்சில் மோதியது. எதிர்காலத்தைப்பற்றி எண்ணினோம், பேசினோம். புருஷனும் மனைவிமாகப் புகப்போகும் வாழ்க்கைக் கனவுகளைக் கண்டோம். காலை மாலை கடவுளை வணங்கிவந்தோம். **காதலெண்ணம் ஈடேறுவது கலியுகத்திற்குப் பொருந்தாது போலும்.** வேறொருவனுக்கு அவள் அடிமையாக்கப் பட்டாள்; அடுத்த வருஷத்திலேயே மற்றோர் மங்கையும் என் கைபிடிக்க வந்தாள். கல்லானது என்மனம்; **இனியோர் தெய்வம் தொழேன்** என்கிறது என் மனம்.

* * * *

சிறிய உத்தியோகங்களைப்பற்றி நான் சிந்தித்ததும் கிடையாது. ஆயிர மாயிரமாக சம்பாதிக்கலாமென்று இருந்தேன். எம். ஏ. பட்டமுண்டு; ஐ. சி. எஸ் பரீக்ஷைக்குப் போய் அடிபட்டு வந்த சிறப்புண்டு; உயர்ந்த சிபார்சுகளுண்டு—எல்லார் மிருந்தும்

என்ன பயன்? முப்பது ரூபாய் வேலையில் இன்று மண்டி இட்டு எழுதுகிறேன். நரகவேதனை யடையும் என் மனம் **இனியோர் தெய்வம் தொழேன்** என்கிறது.

*　　*　　*　　*

இல்லாள் அகத்திருக்க இல்லாதது ஒன்றுமில்லையாம்; யாருக்கு என்ன இருந்ததோ அறியேன். அழகுள்ளவள், குண முள்ளவள், அடக்கமுள்ளவள் அவள்-எல்லா மிருந்தும் அவளிடம் காதல் சுகத்தோடு கலந்தறியேன்—என்னை மகிழ்விக்க அவளும் எவ்வளவோ பிரயாசைப் படுகிருள்; அவளுடன் சந்தோஷம் கொண்டாடுவதாக நானும் எவ்வளவோ முயற்சிக்கிறேன், ஒன் றுச் பயனில்லை. போதாதற்கு பொன்னி அம்மன் குறை என் பார்கள். கலியாணமான அரை டஜன் வருஷத்தில் கால் டஜன் பெண் குழந்தைகள். அரசமரம் சுற்றி யறியாள் அவள், கோயி லைச் சுற்றிவரும் மூன்று சுற்றில் முதல் சுற்று குழந்தை வேண் டாம் என்பதே என்னுடையது. இருந்ததும் இந்த மூன்று தேவி யின் அவதாரங்கள். குடும்பம் பாரமாகின்றது; என் மனம் சலிக் கிறது; ஆனதால் **இனியோர் தெய்வம் தொழேன்.**

*　　*　　*　　*

இன்னும் என்னை வருத்தும் துன்பங்கள் பல. உண்மை யான ஓர் நண்பனை ஓடித் தேடுகிறேன்; அகப்பட்டவர்களிடமெல் லாம் கபடமும் வஞ்சகமுமே கலந்திருக்கிறது. உறவினர்களைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. எதிலும் எவ்வித சுகமும் காணேம். மனம் இரும்பாகி விட்டது. இங்நிலையில் என் மனம் என்னை எங்கு கொண்டு போகுமோ அறியேன். **இனியோர் தெய்வம் தொழேன்** என்ற உறுதி இன்று மிக பல முடையதாகத் தோன்று கிறது. நாளை என்ன நடக்குமோ என் மனதிற்கு எங்நிலை வருமோ!

---

(493-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஏட்டைப் பிரித்து, தன் இடுப்பிற் செருகி யிருந்த எழுத்தாணி யையும் எடுத்தார். "சிந்தாமணி" என்ற அக் காவியத்திலே, 'விமலையா ரிலம்பகம்' என்ற பகுதியிலே, சீவகனை மேன்மாடியில் பந்து விளையாடிக் கொண்டிருந்த விமலையானவள் கண்டு காத லுற்ற தன்மையை அத் தவயோகியான திருத்தக்கத்தேவர் இவ் வாறு எழுதினர்.

நீர்தங்கு திங்கண்மணி நீணிலந் தன்னு ளோங்கிச்
சீர்தங்கு கங்கைத் திருநீர்த்தண் டுவலைமாந்திக்
கார்தங்கி நின்றகொடி காளையைக் காண்டலோடும்
பீர்தங்கிப் பெய்யா மலரிற் பிறிதாயினளே.

[திங்கண்மணி—சந்திரகாந்தக் கல்; திருநீர்த்தண் துவலை மாந்தி- சிறந்த நீர்த்திவலையின் குளிர்ச்சியை உண்டு; கார்தங்கி—பசுமை பொருந்தி; கொடி-பூங்கொடி போன்ற விமலை; காளை—காளை போன்ற சீவகன்; பீர்தங்கி—வெளுப்புற்று; பெய்யாமலரின் உப யோகமற்ற பூங்கொடிபோல்; பிறிதாயினள்—ஒத்தாள்.]

# நரபலி  (கு. ராஜாராம்) 

## 1

ஸ்காண்டிநேவிய தேசத்து ஜனங்களை ஒரு கொள்ளை நோய் வாட்டியது. பஞ்சப் பேயும் தலை விரித்தாடிற்று. மக்கள் வதைக்கும் பிணியாலும், வாட்டும் பஞ்சத்தாலும் உடல் நலிந்து வலியிழந்தனர்.

இவை மட்டுமா? இவற்றுடன் விரோதிகளின் கொடுமையும் சேர்ந்து கொண்டது. திடீரென்று தாக்கிய எதிரிகளின் அட்டகாசம் மிகவும் கொடூரமா யிருந்தது. பயிர்களும், செடி கொடிகளும் தீ மூட்டப்பட்டு எரிந்து சாம்பலாயின. எமதூதர்களாக வந்த நோயும், பஞ்சமும், எதிரிகளின் அட்டூழியமும் கணக்கில்லாத மக்களின் உயிரைக் கவர்ந்து சென்றன.

எஞ்சியிருந்த மக்கள், "கடவுள் நம் தேசத்தின் பேரில் கோபம் கொண்டிருக்கிறார். தேசத்துத் தெய்வங்களின் கோபமே இவைகளுக் கெல்லாம் காரணம்" என்று கத்தமுடியாமல் கத்தினர்.

பூசாரி பயத்தால் நடுநடுங்கிப் பலிபீடத் தருகே சென்று, 'தார்,' 'ஓடின்' என்னும் இரு தெய்வங்களுக்கு முன்னால் கரம் கூப்பினான்.

"எங்களைப் பஞ்சத்திலிருந்தும், நோயிலிருந்தும், சண்டையிலிருந்தும் விடுவியுங்கள். தெய்வங்களே! உங்களுக்கு வேண்டியதென்ன? மனித உயிரா? எங்களுக்கு நெருங்கியவன் வேண்டுமா? அல்லது உயிர்க்குயிரானவன் வேண்டுமா?...வாளா இருக்கிறீர்களே! பதில் கூறுங்களேன்!......உங்களுக்கு வேண்டியவனை நரபலியாகக் கொடுக்கிறோம்," என்று கதறிப் பிரார்த்தித்தான்.

பதிலொன்றும் வரவில்லை.

## 2

ஆனால் இன்னும் எதிரிகள் ஊர்களையும், வயல்களையும் அழித்துத் தீக்கிரையாக்கிக் கொண்டுதா னிருந்தனர்.

எண்ணிலாக் கால்நடைகள் எமனுலகு சென்றன. ஆரண்யத்தில் வாழ்ந்த மான்கள் ஆவி துறந்தன. வானவெளியில் பறந்த பறவைகள் அப்படியே இறந்து பாரில் வீழ்ந்தன. இறந்த மீன்கள் வயிறு மேல்புறமாகத் திரும்பின. இரத்தம் கலந்தோடிய ஆற்று வெள்ளம் செத்த மச்சங்களை இழுத்துச் சென்றது. வழியெங்கும் ஒரே பிணக்குவியல்கள். உழுத படைச்சாலைகளில்கூட் பிரேதங்கள் நிறைந்து கிடந்தன.

அப்பொழுது ஸ்காண்டிநேவிய தேசம், நரகலோகம் என்னும் படியாக விளங்கியது.

எந்நேரமும் பூசாரி இறைவனின் முன்னால் காப்பாற்ற வேண்டிக் கதறிக்கொண்டிருந்தான். கதறியதற்குப் பதில் கடைசியில் கிடைத்து விட்டது.

"மக்கள் கொடுந் துன்பங்களுக்கு இலக்காகி மடியும்போது, மன்னவன் மட்டும் மனைவியுடனும், மைந்தனுடனும் மகிழ்வோடு வாழ்கின்றான். அவனுக்கு மிகவும் பிடித்த உயிரைக் கொண்டு வாருங்கள். எங்களுக்கு அவ்வுயிரைப் பலி கொடுங்கள்" என்பதுதான் அப்பதில்.

பதில் கிடைத்ததும் பரவசமடைந்தான் பூசாரி, வேண்டிய ஆட்களுடன் வேந்தனில்லம் நோக்கி விரைந்தான்.

## 3

குன்றுகளையும், கொடிய முட்காடுகளையும் கடந்து அரண்மனையை அடைந்தது அக்கூட்டம். அப்பொழுது அரசன் அங்கில்லை. அவன் காட்டில் வேட்டையாடிக் கொண்டிருந்தான்.

மாடியில் மஹாராணி மைந்தனுடன் அமைதியாய் அமர்ந்திருப்பதைக் கண்டனர். குழந்தையின் கழுத்தில் மிகுந்த அன்போடு தன் கையைப் போட்டிருந்தாள் அரசி. எட்டு வயதுதானிருக்கும் அந்த எழிலொழுகு பாலகனுக்கு. வயது ஆக ஆக வனப்பிலும் சிறந்தான். ஆரோக்கியத்துடனிருந்த அப்பாலகனின் வதனம் சிகப்பாயிருந்தது. தலைமயிர் தங்க நிறத்துடன் திகழ்ந்தது.

பாலகனே பலியிடத் தகுந்தவன் என்றெண்ணினான் பூசாரி. உடனிருந்த ஆட்களுக்கு உத்தரவு பிறந்தது. அடுத்த நிமிஷத்தில் பையன் தூக்கி வரப்பட்டான்.

பலியிடப் பையன் கிடைத்ததும் உவகையால் உரக்கக் கத்தினான் பூசாரி.

"தெய்வங்கள் பதில் கூறின. அதன்படி நாம் அவைகளுக்குப் பையனைப் பலியிடுவோம்" என்று உரத்த குரலில் கூறினான்.

## 4

அரசன் ஆரண்யத்திலிருந்து திரும்பி வந்தான். வேட்டையில் ஒன்றும் அகப்படாததால் வெறுங்கையுடனே வந்திருந்தான்.

"அவன் வந்ததும் வராததுமாய் அரசி, "நம்முடைய குழந்தையைக் கொண்டுபோய் விட்டார்கள். அவனுடைய இரத்தத்தைச் சிந்தி தேசத்தைக் காப்பாற்ற வேண்டுமாம். நாடு முழுவதும் நோயால் பீடிக்கப்பட்டிருக்கிறது. பஞ்சமும் துன்புறுத்துகிறது. விஷபனியின் கொடுமையும் அதிகமாயிருக்கிறது. ஆதலால் குடி ஜனங்கள் கும்பல் கும்பலாக இறக்கின்றனர்.

"இவ்வளவிற்கும் புனிதமான தெய்வங்களின் கோபந்தான் காரணம். அவைகள் சமாதானப் படுத்தப்பட வேண்டும். அப்

பொழுதுதான் நாடு சுபீட்ச மடையும். நாட்டைக் காக்க வேண்டி யது நம் கடமை யல்லவா?

"ஆதலால் உங்களிடம் ஒன்று கேட்கிறேன். உண்மையைச் சொல்லுங்கள். குழந்தையின்மேல் உங்களுக்குப் பிரியம் அதிகமா? அல்லது என்மேல் பிரியம் அதிகமா? இதைத்தான் கேட்கிறேன்.

"அவர்கள் குழந்தையைக் கொண்டுபோய் விட்டார்கள். உங்களை வணங்குகிறேன். நான் கேட்டதற்கு ஒளிக்காமல் உண்மையைக் கூறுங்கள்" என்று சொன்னாள்.

அவன் பதிலை அறியத் துடித்துக் கொண்டிருந்தாள்.

ஆனால் அரசன் தாங்க முடியாத துயரால் தலை குனிந்தான். கடவுள் பயம் வேறு நடுக்கம் கொடுத்தது.

சிறிது நேரங் கழித்து, "இப்பொழுது என்ன சொல்லி என்ன பயன்? எனக்குப் பதிலாகப் பூசாரிதான் தானாகவே எனக்கு யார் மேல் பிரியமதிகம் என்பதை மதித்துக் கொண்டாரே. தெய்வங்கள் இன்னும் நன்றாகத் தேர்ந்தெடுத் திருக்கலாம். எனக்கு நீங்கள் இருவரும் நெருங்கியவர்கள்; இருவரையும் என் உயிராக் மதித்திருந்தேன். யார் மேல் அதிகப் பிரியம் என்பதைக் கூற என்னால் இயலாது" என்றான் தழுதழுத்த குரலில்.

## 5

ஆனால் பூசாரி சந்தோஷமா யிருந்தான். பலிக்கு வேண்டிய பாலகன் கிடைத்து விட்டானல்லவா?

"அரசனுக்கு அதிபிரியமான அவனுடைய ஒரே புதல்வன் கிடைத்து விட்டான்" என்று கூறினான் பூசாரி.

தெய்வங்களுக்கு அளிப்பதற்கு வேண்டிய பொருள்களெல் லாம் தயாராகி வந்தபின், பலியிடுவதற்கு முன்பு செய்ய வேண்டிய கிரியைகளும் நடந்தாய் விட்டன.

பலிபீடத்தில் பாலகன் நிர்வாணமாகப் படுக்க வைக்கப் பட்டான். பூசாரியும் வெட்டுவதற்காக வாளை ஓங்க ஆரம்பித்தான்.

ஆனால் அரசி பலிபீடத்தை நோக்கி விரைந்தோடி வந்தாள். "நான் தான்! என் குழந்தை அல்ல! அல்ல!" என்று ஓலமிட்டுக் கொண்டே வந்தாள். அரசன் அவளைப் போகவிடாமல் பிடிக்க யத்தனித்தான். ஆனால் அவள் தப்பி, "நான்தான் அரசனுக்குப் பிரியமானவள்!" என்று கூறிக்கொண்டே பலிபீடத்தில் சாய்ந்தாள்.

ஓங்கின கை தன் வேலையை முடித்து ஓய்விற்கு வந்தது.

* * * * *

உவகை பொங்கும் உள்ளத்துடன் பூசாரி, "பிதர்க்களே, உங்களுக்கு ஒரு உயிரளித்து விட்டோம். அரசனுக்குப் பிரீதியானவர் யாரென்பதை நீங்களே கூறிவிட்டீர்கள். உங்களுக்கு அரசியை அர்ப்பணம் செய்து விட்டோம்" என்று கூறி வணங்கினான்.

# எதிரொலி 

(சி. குழந்தைசாமி.) 

"கணேசனின் தாயார்" என்ற சிறுக்கதை அன்பர் 'வீரசக்தி'யின் மனதை வேதனைப் படுத்துவதற்குக் காரணமாக இருந்ததுபற்றி நான் மிகவும் வருந்துகிறேன். அவர் தம் மனவேதனை 'கணேசனின் தாயாரின் மேலேற்பட்ட பரிதாப வேதனையன்று; அக்கதாசிரியரின் போக்கின் மேலேற்பட்ட பரிதாப வேதனைதான்' என்பதை நினைக்க என் உள்ளம் அப்படியே சிதைந்து விடும்போ லிருக்கின்றது. 'வேண்டாம், வேண்டவே வேண்டாம்; இந்தக் கதைகள் எழுதும் தொழிலே வேண்டாம்' என்று கூட நான் எண்ணும்படி யாகிவிட்டது. ஆயினும் அன்பர் 'வீரசக்தி'யினிடம் ஒன்று சொல்ல விரும்புகிறேன்.

சிறுகதை என்றால் என்ன? அதை யார் எழுதவேண்டும்? எதற்காக எழுதவேண்டும்? என்னும் விஷயங்கள் பற்றி நன்றாக ஆலோசித்து அன்னவர் ஓர் முடிவுக்கு வரவில்லை என்று நான் எண்ணுகிறேன். ஒரு கால் ஒரு முடிவுக்கு வந்திருந்தாலும் அது நீரிடை நிழலின் நுனிக் கொம்பேறியதாகத்தான் இருக்கும் என்று கருதுகிறேன். அதனால்தான் அவர்கள் "தாயின் உள்ளம் அளவு கடந்த தியாக உணர்ச்சியால் கற்பையும் இழக்கும்படியான அவ்வளவு தைரியம் உண்டா யிருக்கலாம். ஆனால் அதைக் கேள்விப் படுவதோடு நிற்கவேண்டும். இலக்கியக் கட்டுரைகளிலும் அதைக் காண்பது சகிப்பதற் கரியது" என்று அபிப்பிராயப் படுகிறார்கள் என்று எண்ணுகிறேன்.

வாழ்க்கையில் நடக்கும் சம்பவங்களைச் சித்திரிப்பது சிறுக்கதை. வாழ்க்கையில் என்ன நடக்கின்றதோ அதை அப்படியே சித்திரித்து விட்டு ஆசிரியன் விலகிவிட வேண்டும். அதன்றி ஆசிரியனே அபிப்பிராயம் கூற முற்பட்டால் கதையின் அமைப்பு சீர்குலைந்து விடும். ஒருவன் தாசி லோலனாகத் திரிந்து தன் பொருள் யாவற்றையும் இழந்து கஷ்ட மனுபவிக்கிறான் என்று வைத்துக் கொள்வோம். அந்த இடத்தில் கதாசிரியனே,

"தாசிகள் நேசம் மோசமே—சகோதரரே!
தாசிகள் நேசம் மோசமே."

என்று பல்லவி பாடிப் பிரசங்கம் ஆரம்பித்தால் கதையின் சுவை அடியோடு போய்விடும்.

நாட்டில் வறுமைப்பிணி தாண்டவ மாடுகின்றது. ஜன சமூகம் கூட்டுறவுக் கட்டுப்பாடின்றி அல்லலுறுகின்றது. ஒவ்வொரு மனிதனும் தன் உரிமையை இழந்து அல்லது தனக்கு உரிமையல்லாததைப் பெற்றுத் துன்ப முறுகிறான். ஏழையின் மகன் இயற்கையில் அறிவுள்ளவனாக இருக்கிறான் (எல்லா ஏழைப் பையன்களு மல்ல). அவனால் படித்துப் பட்டம் பெற்று வாழ்க்கையில் முன்னுக்கு வர முடியவில்லை. பணக்காரனின் மகன் படிக்க சக்தி யற்றவனாக இருக்கிறான் (எல்லோரு மல்ல). ஆயினும் அவன் பட்டம் பெற்று முன்னுக்கு வந்து விடுகிறான். ஒருவன் ஏழைக்

குடும்பத்தில் பிறப்பது அவனுடைய குற்றமா? அல்லது அவன் தலை விதியா? விதியுமில்லை; ஒன்றுமில்லை. சமூகத்தைச் சரியான முறையில் அமையுங்கள். ஒவ்வொரு மனிதனுக்கும் தன் தன் இயற்கைக்கு, ஆற்றலுக்கு, அறிவுக்குத் தகுந்தவாறு வேலை கொடுங்கள். அப்போது இந்தப் பாழாய்ப் போன விதி என்ன செய்கின்றது பார்ப்போம். அதனால் ஒரு துரும்பைக் கூட அசைக்க முடியாது. விதி என்று ஒன்று இல்லவே இல்லை. மனிதனுக்கு எது அவசியமோ அது கிடைப்பதற்கு வழி யில்லாமல் அவன் வருந்துகிறான். நிலைமை இவ்வாறிருக்கையில் மனிதரிடையில் கொலை, களவு, கள், காமம், சூது முதலிய பாவங்கள் இருந்தே தீரும். வறுமைப்பிணி அகன்றால்தான் மனிதசமுதாயம் அமரத்துவமடையும்.

தாய் மகனின் படிப்புக்காகத் தன் கற்பைத் தியாகம் செய்தாள் என்று ஒருவன் எழுதினால் அதிலிருந்து மகனின் நன்மைக்காகத் தாய் தன் கற்பையும் இழக்கலாம் என்று பொருட்படாது. 'கற்புடைமை தெய்வீகத் தன்மை. அதை யாரும் எக்காரணம் பற்றியும் இழத்தலாகாது. ஆனால் வறுமையும் அறிவின்மையும் சேர்ந்து மனித உள்ளத்தின் பண்பை மாற்றிப் பாவக்குழியில் விழச் செய்கின்றன. ஆகவே, மனிதரிடையிலுள்ள அறிவின்மை, வறுமை முதலியவற்றை நீக்குவதற்கு நாம் வழிதேட வேண்டும். அப்போதுதான் நாம் தூய வாழ்வு நடத்த முடியும்' என்பதுதான் என் அபிப்பிராயம்.

"தாயின் தியாகத்தை யாரும் மறுப்பதற்கில்லை. அவள் செய்யும் எத்தனையோ தியாகங்களைக் கேட்டிருக்கிறோம்............ ......ஆனால் கற்பை இழந்ததாக் எங்கும் கூறப்படவில்லை. ஒரு வேளை மேனாட்டுக் கதைகளிலே இவ்வித சம்பவம் வர்ணிக்கப்பட்டிருக்கலாம். நம் தமிழ்க் கதைகளிலோ, அல்லது காவியங்களிலோ இவ்வாறு நேர்ந்தது கிடையாது. சாதாரண வாழ்க்கையிலும், அக்கம் பக்கத்திலும் இவ்வித சம்பவங்கள் நிகழ்ந்திருக்கலாம். மனிதனின் இதயத்தைப் பண்படுத்தும் இலக்கியத்திலே இப்படி எழுதப்பட்டது கிடையாது" என்று அன்பர் 'வீரசக்தி' சொல்லுவது எவ்வளவு தூரம் உண்மை என்பது எனக்கு விளங்கவில்லை. தன்னைக் காதலித்த பெண்ணை மணம்புரிய மனமில்லாத நிலையில் ஒருவன் அவளுடைய மூக்கையும் முலைகளையும் அறுத்தது முதல், *வியாதியாய்க் கிடக்கும் புருஷனுக்கும் நாலைந்து பிள்ளைகளுக்கும் உதவி செய்வதற்காக ஒரு பெண் ஒரு நாள் அந்திப்போதில் ஒரு சந்தில் புகுந்து அவள் மீது சில நாட்களாக் "கண்" வைத்திருந்த ஒருவனிடம் தன் கற்பை விற்றுப் பன்னிரண்டணா வாங்கினது வரையில் நம் தமிழ் இலக்கியங்களில் கதைகளில் வந்திருப்பது அவருக்கு ஞாபகமில்லை என்று நினைக்கிறேன்.

"மகன் பரீக்ஷை பணம் கட்டுவதற்காக அவள் (தாய்) தன் கற்பை இழந்தாளென்றால் அது என் சிந்தனையை வானளாவ வளர்ப்பதற்குப் பதில்—அதைச் சுக்கு நூறாகச் செய்து சிந்திக்க

வும் சக்தியறும்படிச் செய்து துக்கிக்கும்படிச் செய்து விட்டது'' என்று அன்பர் 'வீரசக்தி' சொல்லுகிறார். ஆம்; நான் அக் கதையினிட மிருந்து எதிர்பார்த்த எதிரொலி இதுவேயாம். அன்பர் 'வீரசக்தி'யின் சிந்தனையைச் சுக்கு நூறாகச் சிதறச் செய்தது போல் என் கதை தமிழ் நாட்டிலுள்ள ஒவ்வொரு மனித னின் பெண்ணின் சிந்தனையையும் சிதறடிக்க வேண்டும். அப் போதுதான் தமிழ் நாட்டிற்கு விமோசனம் ஏற்படும். பெண்கள் கற்புநெறி தவறலாகாது என்பதை அன்பர் 'வீரசக்தி' நூறு சத மானம் உணர்ந்திருக்கின்றார். அவரைப் போல் தமிழ் நாட்டி லுள்ளோர் யாவரும் உணர வேண்டும். பெண்கள் மாத்திரம் கற்புடையவர்களாக இருந்தால் போதுமா? ஒரு பெண் அன்னிய புருஷனைப் புணர்ந்தால் நாம் அவளைப் பேய் என்று அழைக்கின் றோம். ஆனால் தன் மனைவி யல்லாதவள் ஒருவளைப் புணரும் ஒருவ னுக்கு—விண்ணுலகைக் கொடுப்பதுடன் அவனை ஒரு புஷ்ப விமானத்தினும் அனுப்பி வைக்கிறோம். இது அதிநுட்பமான தமிழர் நாகரீகத்தின் விளைவா?

கணேசனின் தாயார் செய்தது சரி என்று நான் சொல்லு கிறேனா? அல்லது அவள் இறந்த பின் விண்ணுல கெய்திற்று அவள் ஆத்துமா என்று குறிப்பிட்டிருக்கின்றேனா? கணேசனின் தாயார் செய்தது போல் பிற மாதரும் அவசியம் ஏற்பட்டால் தம் பிள்ளைகளின் நன்மைக்காகத் தம் கற்பை இழக்கலாம் என்று தான் சொல்லியிருக்கிறேனா? இல்லையே! கணேசனின் தாயார் செய்தது மகா பாவமான காரியம். அவள் அத்தகைய தீச்செய லைச் செய்வதற்குக் காரணமாக இருந்தது அவளுடைய வறுமை. எனவே, மக்களிடையே யுள்ள வறுமையை நீக்குவதற்கு வழி தேடுங்கள் என்று ஓலமிடுகின்றது என் கதை. அந்த ஓலத்தின் எதிரொலியை அன்பர் 'வீரசக்தி'யிட மிருந்து கேட்கும் பாக்கியம் பெற்றதற்காக நான் ஒரு வகையில் சந்தோஷமும் கொள்ளு கிறேன்.

"ஒரு பெண் தன் மகனின் நன்மைக்காகத் தன் கற்பையே விற்கின்றாள் என்று வைத்துக் கொள்வோம். எனினும் அதை ஒரு சிறு கதையில் புகுத்துவானேன்?'' என்று அன்பர் 'வீர சக்தி' கேட்கக்கூடும். "புகுத்தினால் வரும் கெடுதி என்ன?'' என்று கேட்கிறேன், ஆபாசமாக இருக்கின்றதா? ஏழெட்டுப் பெண்களை மணந்தானே சிவகன், அதை விடவா? சூர்ப்பனகை யின் மூக்கையும் முலைகளையும் அரிந்தானே ஒருவன், அதை விடவா? * தன்னை அன்புடன் ஆதரித்து வந்த காமாட்சிநாதன் உயிரோடிருக்கையில் விருத்தாசலத்தோடு ஓடி விடுவதற்கு எத் தனித்தாளே ஒரு காந்திமதி; அதை விடவா? இல்லை. அன்பர் 'வீரசக்தி' இவற்றிற்கு நியாயமான பதில் கூறுவாரா?

---

* இவ்விரு நிகழச்சிகளும் எந்தத் தமிழ் இலக்கியத்தில் இருக்கின்றன என்பதை ஸ்ரீ சி. குழந்தைசாமி கூறுவாரா?

# மணக்கும் மலர்

(குகை-ந. வெங்கடராமன்)

வாழ்க்கைச் சோலையில் பல மலர் மலர்ந்து முடிவில் மண்ணுக் கிரையாகின்றன. (அவற்றுள் சிறந்தவை சில இறந்தும் இருந்தும் உள்ளன; நலம் பொழிகின்றன.) அவற்றுள் ஒன்று மறைந்த **லெனின்.** மற்றொன்று மணக்கும் **ஸ்டாலின்.** இன்றைய உலகத்தில் தலைசிறந்த தலைவர், நிகரற்ற செயலாளர் **(organiser)** ஆகிய **தோழர் ஸ்டாலினைப்** பற்றி சிறிது தெரிந்து கொள்ளுதல் சீரிதே.

ஸ்டாலின் ரஷ்யா தேசத்தின் தலைவர். **சார் (Czar)** என்போரின் குடியேற்ற மாகாணமாகிய **ஜியார்ஜியாவின்** ஒரு கிராமத்தில் 1879 ல் பிறந்தவர். அவருடைய தந்தை டைப்ளிஸ் என்னுமிடத்தில் செருப்பு ஆலையில் வேலை பார்த்து வந்தார். பின் செம்மாளுகைத் தானே தொழில் நடத்தினார். சார் மன்னர் காலத்தில் செருக்குடைய முதலாளிகள், நீதிபதிக்ளுக்கும் உயர்ந்த உத்தியோகஸ்தர்களுக்கும் நாட்டைக் கொள்ளையடிக்க உதவிசெய்து வந்தனர். இதனால் மிக ஏழ்மை நிலையிலிருக்கும் குடிகளுக்குச் செல்வர்கள் மீது சினமும் பகையும் உண்டாயின.

**யோசப் ஜுகாஸ்வல்லி** என்பது ஸ்டாலினுடைய உண்மைப் பெயர். தந்தையின் கிறிஸ்தவப் பெயர் **'விஸாரியன்'** என்பது. ஸ்டாலின் தம் பெற்றோரால் சமயப்பாதிரி வேலைக்குப் படிப்பதற்காக அனுப்பப்பட்டார். 15 வயதில் **கார்ல் மார்க்ஸ் (Karl Mark)** கொள்கைகளை வாதிக்கும் சிறு கூட்டத்தாரோடு கலந்துகொண்டு பள்ளியிலேயே ஒரு சங்கம் நிறுவினார். அதனால் பள்ளியிலிருந்து நீக்கப்பட்டார். 1900 ல் **சமுதாய ஜனநாயகக் கட்சிக்கு** உறுப்பினரானார். அப்பொழுது போலீஸ் தொந்தரவு ஏற்பட்டதால் ஒரு பொய் அனுமதிச் சீட்டுப்பெற்று நிலத்துக்குக் கீழ்ச் சிறிதுகாலம் வசித்து வந்தார். பின் **பாட்டூம்** என்னும் துறைமுகத்துக்குப் போய் கப்பலில் வேலை செய்தார். அங்கு அவர் கைது செய்யப்பட்டு $1\frac{1}{2}$ வருஷம் சிறையில் காலங்கழித்துப் பின்னர் **கீழைச் சைபீரியாவுக்குக்** கொண்டுபோகப் பட்டார். ஆனால் அங்கிருந்து பாட்டூமுக்குத் தப்பியோடி வந்து விட்டார்.

வந்தபின் லெனின் என்பாரின் புரட்சிக் கட்சியில் சேர எண்ணினார். ஸ்டாலின் **காக்கஸ்** மலைக்கருகே உள்ள இடத்தில் திரும்பி வந்த சமயம் கட்சித் தலைவராக ஏற்றுக் கொள்ளப் பட்டார்.

1905 ல் சாருக்கும் குடிகளுக்கும் சண்டை உண்டாக ஆரம்பித்தது. நிகழ்ந்த குழப்பங்களில் தம் திறமையைக் காட்டினார். தங்களுக்கு வேண்டிய பணத்திற்குப் பாங்கிகளைக் கொள்ளையடித்தார். அப்போதுதான் **போல்சிவியத் தலைவரான 'மலைக்கழுகு'** என்

பவரை ஸ்டாலின் நேரிற் கண்டார். அச்சமயத்தில் புரட்சிக்கட்சி 'பிரவ்டா' என்னும் தங்கள் தினசரியின் உதவி கொண்டு தம் சொல் வன்மையை மிக விரைவில் நிறையாக்கிற்று. கட்சி முன்னேற்றத்தின் பொருட்டு நாட்டு மாகாணங்களுக்கு ஸ்டாலின் பல தடவை சென்றார்.

1907ல் காக்கஸிலுள்ள **பாக்கு** என்னும் பட்டணத்துக்குச் சென்றார். அங்கு தொழிலாளிகள் **மென்சேவிக்** என்பவர் சார்பில் இருந்தனர். ஸ்டாலின் செய்த செய்கைகளால் அங்கிருந்தோர் இவருடன் சேர்ந்து விட்டனர். 1912ல் '**சமுதாயக் கட்சியும் தேசீயக் கேள்வியும்**' என்பது பற்றி ஒரு நூல் எழுதினார். சின்னாளில் லெனின் சிபார்சின் பேரில் கட்சியின் உட்கழகத்திற்கு உறுப்பினராகச் சேர்க்கப் பட்டார்.

1913ல் **மலினுவிஸ்கி** என்பவரால் அவர் போலீஸுக்குக் காட்டப்பட்டுச் சைபீரியாவில் பனிக்கடலினருகில் கைதியாக வைக்கப் பட்டார். 1917ல் நடந்த புரட்சிதான் அவரை விடுவித்தது. நடந்த புரட்சியில் தம் பத்திரிகையின் மூலம் அரசாங்கத்தைத் தாக்கி மக்களனைவரையும் தம் பக்கம் திருப்பினர். அப்போது லெனின் ஓடிப்போக வேண்டிய நிலைமை ஏற்பட்டது. **அலிலுயே** என்பவர் வீட்டு மாடியில் நடைபெற்ற போல்ஷிவியத் தலைவர்களின் கூட்டம் 'லெனின் நாட்டைவிட்டு ஓடவேண்டும்' என்று தீர்மானித்தது. ஸ்டாலின் அலலுயேவின் மகளை அங்கு சந்தித்தார்; பிற்காலத்தில் அவளையே மணந்தார்.

விரைவில் கலகம் உச்ச மெட்டியது. குடிகளுக்கும் அரசருக்கும் மாறுபாடு. 1919ல் புரட்சிக் காரர்கள் செஞ்சட்டை அணிந்து சிப்பாய்களை எதிர்த்துப் போராடினர். 1922ல் ஸ்டாலின் பொதுஉடைமைக் கட்சிக்கு அமைச்சராக நியமிக்கப் பட்டார். 1933 வரை உள்நாட்டுக் கலகங்கள் இருந்துகொண்டே இருந்தன. **நாட்டிற்கு விளையக்கூடும் அபாயங்களை யொழித்து நாட்டில் பொருள் வளர்ச்சியை ஏற்படுத்தி, உழவில் சமுதாயத் திட்டத்திற்கு அடிப்படை கோலுவதற்காக முதல் ஐந்து வருடத் திட்டம் (First Five-year Plan) வகுக்கப் பட்டது.** லெனின் இறந்த 10 வருஷங்களில் ஸ்டாலின் ஏழை ஜனங்களை முன்னுக்குக் கொண்டு வந்தார். அதனால் வேலையில்லாத் திண்டாட்டமும் கிராம எளிமையும் ஒழிந்தன. திரளான மக்களின் நிலைமை சீர்திருந்திக் கொண்டிருக்கிறது.

**ஸ்டாலின் தொழிலாளி நேசர்; காப்பாளர். அவர் உற்பத்தி செய்த ரஷ்யா எதிர்கால உலகின் சின்னம்.**

---

# வார்தா நினைவுகள்

("சமூகத்தொண்டன்.")



(சென்ற இதழின் தொடர்ச்சி)

இந்த இயற்கை சோடாவினால் சவுக்காரம் செய்ய வழிகண்டது மகன் வாடிதான். இயற்கை சோடா என்பது நமது நாட்டு ஏகாலியர் உபயோகிக்கும் "உவர் மண்." இந்த மண்ணிலிருந்து சவுக்காரம் செய்வதென்றால் நீங்கள் அதிசயப்பட வில்லையா? ஆனால் இந்த உவர் மண்ணில் சவுக்காரத்திற்கான Caustic என்னும் உப்பு எத்தனை வீதம் கிடைக்கின்றது என்பதை அறிந்து கொள்ள வேண்டும். நமது சென்னை மாகாணத்தில் 7 வீதம் தான் இருப்பதாய்க் கூறப்படுகிறது. ஆனால், மத்திய மாகாணத்திலும் கான்பூர் முதலிய விடங்களிலும் இது 35 வீதம் கிடைக்கிறதாய்த் தெரிகிறது.

ஆகவே, பனிக்காலத்தில் விளையும் உவர்மண், இது காறும் அழிந்தது போல் இனியும் அழியாதபடி, மகன்வாடி பயன்படு முறையைக் கண்டது. இம் முறை கிராம வாழ்விற்கு எத்தகைய தகுதியை உண்டாக்கி யிருக்கிறதென்பதை வாசகர்கள் சிந்திக்காமல் இருக்க முடியாது.

## தேனீ வளர்த்தல்

பாரதநாட்டுக் குடியானவன், நாட்டின் முதுகெலும்பு என்பதை இப்போது அறிஞர்கள் அறியத் தலைப்பட்டு விட்டனர். ஆனால், இந்திய விவசாயி செழுமையற்றுக் கிடக்கின்றான். நிலம் உழுதலோடு வேறு ஒரு வருவாயும் அவனுக்கு இருக்கவேண்டியது அவசியமாகின்றது. இதற்குத் தேனீ வளர்ப்பது ஓர் நல்ல குடிசைத் தொழில்தான். இத்துறையில் உலகத்தின் எப்பகுதிகளிலும் இப்போது கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. ஜெர்மனி நாட்டில் மட்டும் சுமார் 27 லட்சம் தேன் கூடுகள் வைத்து பாதுகாக்கப்பட்டு வருவதாக அறிகிறோம். இந்த வகையில் அந்த நாட்டிற்கு ஆண்டுதோறும் இரண்டுகோடி ரூபாய்கள் வருவாயாகக் கிடைப்பதாய்க் கணக்கிடப் படுகிறது. ஆயினும், தேனீ வளர்த்கல், இன்னும் நமது நாட்டில் ஆரம்ப நிலைகூட அடையவில்லை. அரசாங்கம் இத்துறையில் போதிய கவனம் செலுத்துவதாயும் காண்கிலோம். ஆகவே, அடிகளது ஆசிபெற்ற மகன்வாடி, தேனீ வளர்த்தலை குடிகளிடம் புகுத்த வேண்டுமென்று ஆராய்ந்து வருகிறது.

தேனீ வளர்த்தலால் தேன் கிடைப்பதோடு இன்னொரு நன்மையும் உண்டு. இந்த நன்மை மகன்வாடியில் கண்ணாரக் கண்ட வுண்மையாகும். அதாவது அங்கு தேனீ வளர்க்கத் தொடங்கியபின் அங்குள்ள கனிதரு மரங்களெல்லாம் முன்னையினும் பன்மடங்கு அதிகப் பலனைத் தருவதாகும். அங்குள்ள கொய்யா மரங்களும், சீமை இலந்தை மரங்களும் ரூபாய் 200க்கு மேல் ஆண்டுதோறும் தருகின்றனவாம். விவசாயிகள் பாடில்லாமல் இவ்வாறெல்லாம் நலம் பெறுவ தென்றால் அது அமரவாழ் வென்றுதான் போற்ற வேண்டும்!

## வெல்லம் காய்ச்சல்

வெல்ல வகைகளில் பனைவெல்லம் சிறந்த இடத்தைப் பெற்றிருக்கிற தென்பதை சித்த-ஆயுர்வேத மருத்துவ நூல்களை ஆராய்வோர் பார்க்கத் தவற மாட்டார். நமது தமிழகத்திலோ பனைக்குக் குறைவில்லை. பனையுடன், தென்னை, ஈந்தும் உள. இருந்தும் நாம் பயன் பெற முயலவில்லை. இவ் வகையில் திருநெல்வேலி ஜில்லா சற்று விழிப்புடன் இருப்பது போற்றற் குரியதாகும். ஆனால், ஏனைய தமிழ் ஜில்லாக்களில் அசடு வழிகிறது. கட்குடியை ஒழித்த சேலம், வட ஆற்காடு ஜில்லாக்களிலாவது இத்தொழில் போதியபடி நடத்தினால் வேலையில்லாத் தொல்லையாவது ஒரு வகையாய் நீங்கும். வங்காளத்தில் ஒவ்வொரு ஊர்களிலும் ஈச்ச மரங்களைக் கிராம மக்கள் பயிர் செய்து அதிலிருந்து வெல்லம் உற்பத்தி செய்கிறார்கள். தமிழகத்திலும், ஆந்திர நாட்டிலும் எப்படிப் புளியில்லாமல் உணவு தயாரிக்க முடியாதோ, அவ்வாறே வங்காளிகளுக்கு வெல்லம் அவசியமாய் வேண்டியிருக்கிறது. இவ்வளவு தேவையையும் அவர்கள், தங்கள் நிலங்களில் வளர்ந்து கிடக்கும் ஈச்ச மரங்களி லிருந்தே பெறுகிறார்கள். சென்னை மாகாணத்தைச் சேர்ந்த கடற்கரையின் நீளம் குறைந்தது 1500 மைல் இருக்கும். இவ்வளவு தூரமும் பனையும் தென்னையும் மலிந்து கிடக்கின்றன. இந்தக் கோடிக்கணக்கான மரங்களையும் வெல்லம் காய்ச்சும் தொழிலுக்கு மாற்றினால் எத்தனையோ இலட்சம் மக்களுக்கு வேலையும், ஆண்டு தோறும் கோடிக்கணக்கான ரூபாய்கள் வருவாயுமாய்க் கிடைக்கும் என்பதில் ஐயப்பாடே யில்லை. பொருளாதாரத்தைப் பொறுத்தமட்டில் கல்லிலும் நார் உரிக்கும் திறன்வாய்ந்த வெள்ளையர் இந்தியாவைப் பொறுத்த வரையில் மாற்றாந்தாய் மக்களாகவே நடத்துவது கண்கூடு. ஆனால் காந்தியடிகளும், மகன் வாடியும் அவ்வாறு இருக்கத் தரியாரன்றோ? எனவே, வெல்லத் தொழிலுக்கும் மகன் வாடியில் அரிய ஆராய்ச்சிகள் நடைபெறுகின்றன.

## களிமண் வேலை

புதுச்சேரி பொம்மைகளைக் காணும்போ தெல்லாம், கலைவளர்ச்சி கவனத்தை யீர்க்கிறது. பண்ணுருட்டி, புதுச்சேரி பொம்மைகள் இல்லை யென்றால் தமிழகத்தில்—ஏன்? தென் இந்தியாவிலேயே நவராத்திரி கொலுவிற்கு இத்தனை மகத்துவம் இருப்பதற்கில்லை. இவ்வாறே ஜபல்பூர் ஜாடிகளும். ஜபல்பூரில் ஜாடிகள் செய்வதற் கென்றே இரு பெரிய வர்த்தகக் கம்பெனிகள் வேலை செய்கின்றன. களிமண் தொழில் நாட்டின் பலபாகங்களிலும் அபிவிருத்தியடைய நல்ல மார்க்கமிருக்கிறது. ஆகவே, இத்தொழிலும் மகன்வாடியில் இடம் பெற்றிருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

## கோதுமை நெல் அரைத்தல்

மேற்கூறிய இத்தனைத் தொழில்களுடன் நெல் அரைந்து அரிசியாக்கலும் கோதுமையை அரைத்து மாவாக்கலும் கூட மகன்வாடியில் புதிய முறையாய் நடத்தப்பட்டு வருகிறது. நெல்லையும், கோதுமையையும் முறையே அரிசியும் மாவுமாக்க இக்காலத்தில் ஆலைகளிருக்க, மகன்வாடி இத்துறையில் புதிய வழிகாண என்ன விருக்கும் என்றுதான் கேள்வி யெழும். உண்மை, ஒருவனுக்கு ஓர் மாம்பழம் கிடைத்ததாக வைத்துக் கொள்வோம். ஆனால், அவன் தனக்குக் கிடைத்த பழத்தைக் கொஞ்சமும் வீணாக்காது உண்டால்தான் பழத்தைப் பெற்றதின் பயனை யடைவான். அவன் உள்ளமும் உடம்பும் செழிப்படையும். ஆனால், செம்மையாய்த் திருத்திப் பக்குவமாய் உண்ண வகையறியா திருப்பானுனல், எத்தனைப் பழங்கள் கிடைக்கினும் பயனென்ன? அப்படியே தான், நம

இயற்கையன்னை அளிக்கும் உணவுப் பொருள்களைப் பக்குவம் செய்ய வகையறியாது பாழ்ப்படுத்துகிறோம்.

எடுத்துக் காட்டாக, நாம் உணவாகக் கொள்ளும் அரிசியைப் பற்றி யாராய்வோம். அது, சிறிது காலத்திற்கு முன்வரையில் கையினாலேயே குத்தி தயார் செய்யப்பட்டு வந்தது. அப்படித் தயாரான அரிசியில் உமி மாத்திரமே நீங்குமல்லது ஏனைய சத்துப்பொருளாகிய தவிடு நீங்குவதில்லை. அரிசியை மூடியுள்ள தவிட்டில்தான், உடம்பை நன்கு போஷிக்கும் சத்துப் பொருள் நிரம்பிக் கிடப்பதாக இப்போதைய ஆராய்ச்சிக்காரர்கள் கண்டிருக்கிறார்கள். இந்தச் சத்துப் பொருளை நாம், சிறிது காலத்திற்கு முன் வரை நன்கு பயன் படுத்தி உடம்பைப் பாதுகாத்து வந்தோம்; நோயறியோம், "டானிக்"குகள் உண்டறியோம். ஆனால், இப்போது இதெல்லாம் பழங்கதை! கதையும் மறந்து விட்டது!

இப்போது எல்லாம் புதுமை! ஆலையில் அரைத்த அரிசி வெள்ளை வெளேரென்று வருகிறது. முக்கிய சத்துப் பொருளைத் தொலைத்துவிட அரிசி தேயத் தேயத் தீட்டி விடுகிறது ஆலை. நாம் அந்த ஒன்றுக்கும் உதவாத் "துப்பி அரிசி"யை மும்முறை கழுவி, ஒருமுறை வடித்து, கொஞ்ச நஞ்சம், அரிசியில் ஒட்டியிருக்கும் சத்துப் பொருளையும் பாழாக்கி விட்டு "நாசுக்கான 'உணவு" தயாரிக்கக் கற்றுக்கொண்டு விட்டோம். எனவே, அமிர்தமும் நஞ்சாய் விட்டது. வாழ்வும் பாழாகி, நோயும் பாயுமாய்க் கிடக்கின்றோம்.

ஆனால், மகன்வாடி, "இயற்கையோடு இசைந்த இன்பம், இன்பத்தோடு இசைந்த வாழ்க்கை" என்பதை வலியுறுத்தி, அதற்கான வகையில் உணவு தயாரிக்கும் முறையைச் செப்பனிட்டு வழி காட்டுகிறது. இதுதான் தவிடு போகாமல் அரிசி தயாரிக்கும் முறை.

மேற்கூறியபடி, மற்றும் பல தொழில்களும் அங்கு பயிற்ற வழிகள் காணப்பட்டு வருகின்றன. இந்திய நாட்டின் எல்லா மாகாணங்களி லிருந்தும், ஆண்டுதோறும் 100க்கு மேற்பட்ட மாணவர்கள் மகன்வாடிக்கு வந்து, தொழில் பயின்று செல்லுகின்றனர். இவ்வாறு நான்கு ஆண்டுகளாய் அங்கு பயிற்சி அளிக்கப்பட்டு வருகிறது.

இதுகாறும் மகன்வாடியில் பயிற்றும் தொழில்கள் பலவற்றையும் விளக்கினேன். இனி, அங்கு பயிற்சிக்கு வரும் மாணவர்களின் உணவு, விடுதி, மற்றப்படி ஒழுக வேண்டியுள்ள பொது வொழுக்கங்கள் ஆகிய வற்றை விளக்குமுன், அங்குள்ள பொருட்காட்சி சாலையைப்பற்றி விளக்குவது சாலவும் பொருத்தமாகும்.

## கலைக் கோயில்—பொருட்காட்சி சாலை

எங்கிருந்து எவர் வந்தாலும் மகன்வாடி எல்லையில் அடியெடுத்து வைக்குமுன், அவர்கட்குக் காட்சி யளிப்பது அந்தக் கலைக் கோயில்தான்—பொருட்காட்சி சாலை. அது இந்தியச் சிற்பக் கலைமுறையை யொத்து சுமார் 40,000 ரூபாய் செலவில் சமைக்கப்பட்டுள்ள மாளிகை. பாரத நாட்டின் சின்னமான அழகிய மூவர்ணக்கொடி தெய்வீகத் தன்மையுடன் அப் பொற் கோயிலின்மீது பறக்குங் காட்சியைக் காணுந்தோறும் எந்த இந்தியன் தோள்கள்தான் பெருமையால் பூரிக்காது. அந்தக் கண்கவர் கலைக் கோயில்முன் அமைக்கப்பட்டுள்ள பூம்பொழிலில் இயற்கையன்னை இன்பநடம் புரிகின்றாள். மாளிகைக் கேற்ற தோட்டமும், தோட்டத்திற் கேற்ற மாளிகையு மென்றால் மிகவும் பொருந்தும். இந்தக் கட்டிடத்தின் உருவத்தை முன்பு படமாய் வரைந்து அதன்படி 'கட்டிமுடித்த பெருமை சாந்தி நிகேதனத்துச் சிற்பக் கலைஞரான திரு. நந்தலால்போஸ் அவர்களைச் சேர்ந்த தாகும்.

(தொடரும்.)

தொடர் கதை.

# தேவ தேவி

(வத்றுப்-சு. மீ. கணபதி)

(சென்ற இதழின் தொடர்ச்சி.)

பத்மாசனியின் பெண்ணின் பெயர் ஸ்வர்ணாம்பாள். ஸ்வர்ணவிக்ரகம்தான் எனக் கூறலாம். அங்க அமைப்பு அப்படி. நிறம் மட்டில்தான் வேறு. மாநிறம். ஆனால் வசீகரம் பொருந்தியது. பார்ப்பதற்கு அழகாகவே தோன்றுவாள். குடும்பகஷ்டம் தெரிந்த பெண். நன்றாகப் படித்திருக்கிறாள். சிறிது சங்கீதமும் தெரியும். ஆனால் பெரிய சங்கோஜப் பிராணி. இது அவளுடைய குற்றமல்ல. அவள் ஏழ்மை அவளை அவ்விதம் பழக்கி விட்டது. யாருடனும் அதிகம் பேசமாட்டாள். அவளை நன்றாக அறிந்தவர் அவளை மணந்து கொள்ள போட்டியிடுவார்கள் எனக் கூறலாம். சாந்தமும், அமைதியும் குடிகொண்டவள். நல்ல குணம். அவளுக்கு அதிர்ஷ்டம் எப்படியிருக்கிறதோ ஆண்டவன்தான் அறிவான்.

நிற்க, வாசு எதிர்நோக்கியபடி இவர்கள் கடிதம் வரவில்லை. அவனுக்கு மிகுந்த வியாகூல முண்டாகி விட்டது. பின்னும் ஒரு நாள் தாமதித்துப் பார்க்கலாம் என்ற எண்ணமே அவனுக்கு உதிக்க வில்லை. சோமு எவ்வளவுதான் கூறினபோதிலும் பித்துப் பிடித்தவன் போன்றே இருந்தான். இந்தக் கஷ்டத்திலிருந்து விடுபட வழியில்லையா? இருக்கத்தான் செய்கிறது. அவன் மணம் புரிந்துகொள்ள வேண்டியதுதான் அது. அதற்கு அவன் ஒப்பவில்லை. அவன் ஹிருதயத்தில் தகப்பனுக்கு மட்டிலும்தான் இடமிருந்தது.

"வேறு சமையற்காரர் கண்டு பிடிப்பது கடினமில்லை. நானே இன்னும் ஒரு வாரத்தில் ஒரு ஆளை அமர்த்த வேண்டிய ஏற்பாடுகள் செய்கிறேன். எதுவரினும், நடப்பது நடந்துதானே தீரவேண்டும். நடக்காத காரியமாயிருப்பின் உண்மையில் வருந்த வேண்டியதுதான். இதென்ன பிரமாதமான காரியமென நினைக்கிறாயா?" என்றான் சோமு.

"நீ சொல்வது சரிதான். எப்படியிருந்தபோதிலும் வேலைக்காரர் வேலைக்காரர்தானே. சொந்த உறவினர் மாதிரி ஆகுமா? இவ்வளவு துன்பத்திற்கும் என் சகோதரியல்லவா காரணமானாள். அவளையும் சொல்லி என்ன பயன்? பார்க்கலாம். நாளை முதல் நானே சமையல் செய்ய ஆரம்பிக்கிறேன். பதினைந்து நாட்களுக்குள்ளாக வாவது நன்றாக சமையல் செய்யத் தெரியாமலா போய் விடும்? ஆபீஸ் பதினொரு மணிக்குள் சமையலை முடித்துவிடுவது. பகலில் அவரைக் கவனித்துக் கொள்வது. சாமான்கள் வாங்கவும் ஓர் ஆள் வைத்துக்கொண்டால் போகிறது. எனக்கு அதுதான் நலமாகப் படுகிறது" என்றான் வாசு.

"நீ கூறுகிறபடி எவ்வளவு நாட்களுக்கு முடியும்? ஆபீஸ் வேலை ஒன்று இல்லாவிட்டாலும் பாதகமில்லை. இங்கு பதினொரு மணிவரை புகையில் அடைபட்டு, அதன் பின்பு வேறு வேலை செய்வதென்ற சித்தாந்தம் அதிக நாள் நிலைக்காது. நான் முன்கூறியபடியே எங்கள் வீட்டில் உன் தகப்பனார் சிறிது காலம் இருக்கட்டும். அது உனக்குச் சம்மதமில்லாவிடில் உன் சகோதரியிடமே மறுபடியும் போய்ச் சொல்லி அவருக்கு வேண்டிய ஏற்பாடுகளைப் பூர்த்தியாகக் கவனிக்கும்படி சொல்" என்றான் சோமு.

இவை ஒன்றும் வாசுவின் காதில் படவில்லை. பிரமை பிடித்தவன்போன்று உட்கார்ந்திருந்தான்.

மறுநாட் காலை வாசு இருந்த வீட்டு வேலையாள் யாரோ இருவர் இவனைத் தேடிவந்திருப்பதாகக் கூறினன். வந்தவர்கள் பத்மாசனியும், ஸ்வர்ணமுமாகத்தான் இருக்கவேண்டுமென இவன் ஊகித்தான். சோமுவிடமும் ஒன்றும் கூறாமல் ஆவேசம் வந்தவன்போன்று தன்னிருப்பிடத்துக்கு ஓடினன். இவனும் வந்தவர்களும் ஒருவருக் கொருவர் குசலம் விசாரித்துக் கொண்டனர். இதன் நடுவில் பத்மாசனியையும், ஸ்வர்ணத்தையும் தங்கள் இல்லத்திற்கு அழைத்துச் செல்ல சோமுவும், சுந்திராவும் வந்தனர்.

சோமுவின் அழைப்பை யேற்று எல்லோரும் அவன் இல்லமடைந்தனர்.

இன்னும் பதினைந்து நாட்களுக்கு வாசு லீவு எழுதி அனுப்பிவிட்டான். அவனும் சரி, பத்மாசனியும் சரி, இருவருக்குமே சோமுவின் இல்லத்தில் இருப்பது கஷ்டமாகவே யிருந்தது. வாசுவுக்கு அவர்களை தன் தகப்பனரை எப்பொழுது அழைத்துவருவது முதலிய சங்கதிகளைக் கேட்கவேண்டுமென்ற அவா. பத்மாசனிக்கு வந்த காரியம் இரண்டிலொன்று தெரிந்தால் சீக்கிரம் ஊருக்குத் திரும்பிவிடலாமென்று அதனை அறியத் துடித்து நின்ருள். சோமுவின் சோதரி முதலியவர்கள் எப்பொழுதும் கூடவே யிருந்தனர். இருவருக்கும் இது பெரிய நடங்கலாகவே தென்பட்டது. இவர்களுடைய ஆசாரம் இவனுக்குப் பிடிக்கவில்லை. சோமுவின் வீட்டில் சமைப்பதை சாப்பிட மறுத்து தனி அடுப்பு பற்றவைத்து இவர்கள் சாப்பிட்டார்கள். இது அவன் மனதை உறுத்திக்கொண்டே யிருந்தது. இதுவேதான் அங்கிருந்து வெளியேற உதவி செய்தது. எப்பொழுது சோமு வரப்போகிருன்; அவனிடம் சொல்லிக்கொண்டு தன் அறை சேரலாமென எண்ணிக் கொண்டிருந்தான் வாசு.

சுந்திராவைப் பார்த்த பின்பு பத்மாசனிக்குத் தன் பெண்ணை வாசு மணந்துகொள்வது நடவாத காரியமென்றே தோன்றிற்று. அழகு நிறைந்த அவள் வதனமும், மோகனப் புன் சிரிப்பும், சாதுர்யமும் மதுரமும் கலந்த அவள் பேச்சும் முதலில் பத்மாசனியை வசியப்படுத்திய தென்னவோ வாஸ்தவம். தன் ஸ்வர்ணத்தின் எண்ணம் மனதில் புகுந்த பின்பு சுந்திராவை எதிரில் பார்க்கவும் அவள் விரும்பவில்லை. எப்பொழுது இவ்வீட்டைத் விட்டு வெளியேறப் போகிறேம் என்ற சிந்தனையே அதிகமாகிவிட்டது.

சுந்திராவுடன் ஸ்வர்ணம் தனித்துப் பேசவே அவள் விரும்பினள். சிறு வயதில் வாசுவைப் பார்த்திருக்கிருள். அவன் உருவம் எப்படி யிருக்குமென பலமுறை மானசீகமாக உருவகப்படுத்திப் பார்த்தும் அதில் அவளால் வெற்றிபெற முடியவில்லை. நேரில் வாசுவைக் கண்டதும், அவனை மணந்து கொள்ள அவளுக்கு ஆவல் உண்டாயிற்று. சுந்தராவைப் பார்த்த பின்பு-அவளுடைய வீட்டில் வாசுவுக்கு பூர்ண சுதந்திரமிருப்பதைக் கண்கூடாகப் பார்த்த பின்பு-சுந்திராவின் குணத்தையும் அவர்கள் செய்யும் உபசாரங்களையும் பார்த்த பின்பு-தன் எண்ணப்படி காரியம் நடைபெருது; ஊருக்குத் திரும்பவேண்டியதுதான் என்று தீர்மானித்துவிட்டாள். சுந்திராவிடம் தனித்துப் பேசினல் சிறிது உண்மை வெளியாகலாம் என நினைத்தாள். அதற்கு வசதியில்லை. இவளையே சுந்திரா பல கேள்விகள் கேட்க ஆரம்பித்தாள். அதன்மூலம் இவர்கள் வந்துள்ள விஷயத்தை ஊகித்தாள். மனதில் ஸ்திரமாகக் கொள்ளக்கூடிய அவ்வளவு நிச்சயம் உண்டாகவில்லை. புது மனிதரை என்ன கேள்விகள் கேட்க முடியுமோ அவ்வளவும் அவர்கள் குடும்பத்தைப் பற்றியவரை கேட்டாயிற்று. அதன் பின்பு என்ன கேட்

பது என்றே தெரியவில்லே; இருவரும் சிறிது நேரம் மௌனமாகவே இருந்தனர். தாங்கள் படித்துள்ள புஸ்தகத்தைப் பற்றியே பின்பு பேச ஆரம்பித்தனர்.

மாலேயில் சோமு வந்ததும் எல்லோரும் காபி அருந்தினர். அதன் பின்னர் வாசு தன் அறைக்கே அவர்களே அழைத்துச் செல்வதாகக் கூறினன். சோமு பிடிவாதமாக மறுத்து விட்டான். வாசு அவனேத் தனிமையில் அழைத்துச் சென்று தனக்கு அவர்கள் அங்கேயே இருப்பதற்காக வந்திருக்கிருர்களா என்ற சந்தேகம் இருப்பதாகக் கூறினன். பத்மாசனியும் தான் வாசுவின் அறைக்கே சென்று விடுவதாகக் கூறினள். பின்பு அவளுடைய யோசனேயின் பேரில் கரியடுப்பு, கரி இவைகளே ஒரு ஆளிடம் கொடுத்து எடுத்துவரச் சொல்லிப் புறப்பட்டனர்.

அறையை அடைந்ததும் அதனேச் சுத்தம் செய்த பின்பு, முதலில் பத்மாசனியே பேச ஆரம்பித்தாள். "ஏண்டா வாசு இப்படி திடீரென்று வரச் சொல்லி கடிதம் எழுதினையே! முடிகிற காரியமா? இவ்வளவு காலமாக உன் தங்கையிடம் இருந்து வருகிற வரை ஏன் இங்கு கொண்டு வைத்துக்கொள்ள வேண்டு மென்கிருய்? அங்கு அவருடைய ஏவலேச் செய்து முடிக்கப் பல வேலேக்காரர்கள் இருப்பார்களே" என்ருள்.

"நீங்கள் சொல்வது வாஸ்தவந்தான். அவருக்கு வயது அறுபதுக்கு மேலேயே ஆகிவிட்டது. எந்தக் காரியமும் தனிமையில் செய்து கொள்ளும் சக்தியும், திடமுமில்லே. தான் அதிக காலம் உயிருட னிருப்போம் என்ற நம்பிக்கையும் இல்லே. கடைசி காலத்தில் என்னுடனேயே இருக்க வேண்டுமென ஒரே யடியாகப் பிடிவாதம் செய்கிருர். கமலா எவ்வளவு சொல்லியும் இவர் கேட்கமாட்டே னென்கிருர். இவருக்கென்றே இரண்டு மாதங்களாக ஒரு தனி வேலேயாளும் போட்டிருக்கிருர்கள். என்ன இருந்து என்ன? என் பிள்ளேயுட னிருப்பதுபோல் ஆகுமா என்றே சொல்கிருர். ஆகவே தான் நானும் போயிருந்தேன். திரும்பி வருமுன்பே உனக்கும் எழுதினேன். உன்னே விட்டால் வேறு எங்களுக்கு மனுஷர்கள் ஏது?" என்று சாமர்த்தியமாக வாசு பேசினன்.

அநேகருக்கு முகஸ்துதி பிரம்மானந்தமா யிருக்கும். பெண்கள் விஷயத்தில் சொல்ல வேண்டியதேயில்லே. பத்மாசனிக்கு தன் காரியம் பலிக்கலாமென்ற நம்பிக்கையும் சிறிது உதித்தது. "உன்னே விட்டால், வேறு எங்களுக்கு மனுஷர்கள் ஏது" என்று கூறியதை இருதடவைகள் மனதிற்குள் திரும்பத் திரும்பக் கூறிக்கொண்டாள். (வெளிப்படையாக) "இருந்தாலும் ரொம்பப் பிடிவாதம் செய்கிருர். வயது காலத்தில் எங்கு சௌகரியம் அதிகமோ அங்கு இருக்கவேண்டும். நாம் சொல்லி அவர்கள் கேட்பதில்லே. 'நீ, பாவம் தனிமையில் செய்யக்கூடியது என்ன? வெகுகாலமாய் கிளப்பில் சாப்பிட்டது ஆள் உருமாறி யிருக்கிருய். இனிமேல் அந்தத் தொந்திரவெல்லாம் இல்லாமல் நிம்மதியாக இருக்கலாம். ஆமா; கமலத்துக்கு இரண்டாவது குழந்தைகள் பிறந்தனவா? அவளே சிறுசில் பார்த்தது. பார்க்க வேண்டுமென்ற ஆவல் அதிக மிருக்கிறது. நான் இருந்த இடமும், அவள் இருக்கிற இடமும் எவ்வளவுக் கெவ்வளவுதூரம்! உன்னேயும் படிக்கும்போது பார்த்ததுதான். இனிமேலாவது அடிக்கடி பார்க்கலாம். ஏண்டி சுவர்ணம்! என்ன வாசுவிடம் பேசமாட்டேன் என்கிருயே. அவன் நம்மாத்து மனுஷனில்லியோ. இதிலெல்லாம் என்னடி வெட்கம்?" என்ருள் பத்மாசனி. சுவர்ணம் தலேயைக் குனிந்து கொண்டாள். வாசுவோ இந்த உலக நினேப்பின்றி ஆனந்த சாகரத்தி லிருந்தான்.

# சுபானு ஹூ வைகாசிமீ நவக்கிரக * நிராயன சுத்த ஸ்புடம்

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடியாரமணி-சென்னை காலை 7-மணிக்கு)

| | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன் | | சந்திரன் | | அங்காரகன் | | புதன் | | குரு | | சுக்கிரன் | | சனி | | †ராகு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | நி | ச | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க |
| | | | | | | | | | | (வ) | | | | | | | | | |
| **1** | 15 | 27 | 23 | 30 | 20 | 149 | 19 | 327 | 49 | 42 | 29 | 88 | 02 | 71 | 04 | 50 | 02 | 117 | 30 |
| 2 | 15 | 31 | 19 | 31 | 17 | 162 | 07 | 328 | 34 | 42 | 12 | 88 | 12 | 72 | 12 | 50 | 10 | 117 | 27 |
| 3 | 15 | 35 | 16 | 32 | 14 | 175 | 55 | 329 | 19 | 41 | 55 | 88 | 22 | 73 | 20 | 50 | 17 | 117 | 23 |
| 4 | 15 | 39 | 12 | 33 | 11 | 189 | 12 | 330 | 04 | 41 | 31 | 88 | 32 | 74 | 28 | 50 | 25 | 117 | 20 |
| 5 | 15 | 43 | 09 | 34 | 09 | 202 | 30 | 330 | 49 | 41 | 06 | 88 | 42 | 75 | 36 | 50 | 32 | 117 | 16 |
| **6** | 15 | 47 | 05 | 35 | 06 | 216 | 52 | 331 | 39 | 40 | 36 | 88 | 52 | 76 | 44 | 50 | 40 | 117 | 13 |
| 7 | 15 | 51 | 02 | 36 | 03 | 231 | 14 | 332 | 19 | 40 | 06 | 89 | 03 | 77 | 51 | 50 | 47 | 117 | 10 |
| 8 | 15 | 54 | 58 | 37 | 00 | 245 | 51 | 333 | 04 | 39 | 33 | 89 | 13 | 78 | 59 | 50 | 55 | 117 | 07 |
| 9 | 15 | 58 | 56 | 37 | 58 | 260 | 29 | 333 | 48 | 39 | 00 | 89 | 24 | 80 | 06 | 51 | 02 | 117 | 04 |
| 10 | 16 | 02 | 53 | 38 | 55 | 274 | 56 | 334 | 33 | 38 | 26 | 89 | 44 | 81 | 13 | 51 | 10 | 117 | 00 |
| **11** | 16 | 06 | 49 | 39 | 52 | 289 | 24 | 335 | 18 | 37 | 51 | 89 | 45 | 82 | 20 | 51 | 17 | 116 | 57 |
| 12 | 16 | 10 | 45 | 40 | 49 | 303 | 28 | 336 | 03 | 37 | 18 | 89 | 55 | 83 | 27 | 51 | 25 | 116 | 54 |
| 13 | 16 | 14 | 42 | 41 | 47 | 317 | 32 | 336 | 47 | 36 | 46 | 90 | 06 | 84 | 33 | 51 | 33 | 116 | 51 |
| 14 | 16 | 18 | 38 | 42 | 44 | 331 | 09 | 337 | 32 | 36 | 16 | 90 | 17 | 85 | 39 | 51 | 41 | 116 | 48 |
| 15 | 16 | 22 | 35 | 43 | 41 | 344 | 47 | 338 | 16 | 35 | 47 | 90 | 28 | 86 | 45 | 51 | 48 | 116 | 45 |
| **16** | 16 | 26 | 31 | 44 | 38 | 357 | 59 | 339 | 01 | 35 | 23 | 90 | 39 | 87 | 51 | 51 | 56 | 116 | 41 |
| 17 | 16 | 30 | 28 | 45 | 35 | 11 | 11 | 339 | 45 | 34 | 59 | 90 | 50 | 88 | 57 | 52 | 04 | 116 | 38 |
| 18 | 16 | 34 | 45 | 46 | 32 | 23 | 59 | 340 | 30 | 34 | 42 | 91 | 01 | 90 | 03 | 52 | 12 | 116 | 35 |
| 19 | 16 | 38 | 22 | 47 | 29 | 36 | 48 | 341 | 14 | 34 | 25 | 91 | 13 | 91 | 08 | 52 | 19 | 116 | 32 |
| 20 | 16 | 42 | 18 | 48 | 26 | 49 | 12 | 341 | 58 | 34 | 16 | 91 | 24 | 92 | 13 | 52 | 27 | 116 | 29 |
| **21** | 16 | 46 | 15 | 49 | 23 | 61 | 37 | 342 | 42 | 34 | 07 | 91 | 36 | 93 | 18 | 52 | 35 | 116 | 26 |
| | | | | | | | | | | (ஸ்) | | | | | | | | | |
| 22 | 16 | 50 | 11 | 50 | 20 | 73 | 39 | 343 | 26 | 34 | 07 | 91 | 47 | 94 | 23 | 52 | 43 | 116 | 23 |
| | | | | | | | | | | (வ தி) | | | | | | | | | |
| 23 | 16 | 54 | 08 | 51 | 17 | 85 | 41 | 344 | 11 | 34 | 07 | 91 | 59 | 95 | 27 | 52 | 51 | 116 | 20 |
| 24 | 16 | 58 | 04 | 52 | 14 | 97 | 00 | 344 | 55 | 34 | 15 | 92 | 10 | 96 | 31 | 52 | 59 | 116 | 16 |
| 25 | 17 | 02 | 01 | 53 | 11 | 109 | 19 | 345 | 39 | 34 | 24 | 92 | 22 | 97 | 35 | 53 | 07 | 116 | 13 |
| **26** | 17 | 05 | 57 | 54 | 08 | 121 | 09 | 346 | 23 | 34 | 42 | 92 | 33 | 98 | 39 | 53 | 15 | 116 | 10 |
| 27 | 17 | 09 | 54 | 55 | 05 | 133 | 00 | 347 | 07 | 35 | 00 | 92 | 45 | 99 | 43 | 53 | 23 | 116 | 07 |
| 28 | 17 | 13 | 50 | 56 | 02 | 145 | 12 | 347 | 51 | 35 | 26 | 92 | 57 | 100 | 46 | 53 | 31 | 116 | 04 |
| 29 | 17 | 17 | 48 | 56 | 59 | 157 | 24 | 348 | 34 | 35 | 53 | 93 | 09 | 101 | 49 | 53 | 38 | 116 | 01 |
| 30 | 17 | 21 | 44 | 57 | 56 | 170 | 47 | 349 | 18 | 36 | 28 | 93 | 21 | 102 | 52 | 53 | 46 | 115 | 58 |
| **31** | 17 | 25 | 41 | 58 | 53 | 183 | 10 | 350 | 01 | 37 | 03 | 93 | 33 | 103 | 54 | 53 | 54 | 115 | 55 |

**ஆகாயக் காட்சி:**—14உ பின் இரவு மணி 2-55க்கு சசிக்கு வடக்கே பாகை 1-20ல் குஜனும், 23உ முன் இரவு மணி 8-40க்கு சசிக்கு வடக்கே பாகை 2-10ல் குருவும், 23உ பின் இரவு மணி 2-20க்கு சசிக்கு வடக்கே பாகை 3-40ல் சுக்ரனும் சந்திரனுடன் சமாகமம் பெறுகின்றன. 12உ மாலை மணி 7-12க்கு **குரு-கடக ப்ரவேஸம்.**

* அயனம்சம் பா-22 கலை-56 விகலை 3·1887 கூட்ட சாயன ஸ்புடம் வரும்.

† ஆறு ராசி அல்லது பாகை 180 கூட்ட கேது ஸ்புடம் வரும்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

சுபானுஞு வைகாசிமீ கலியுகாதி 5045, சாலிவாகனம் 1866
பசலி 1352, கொல்லமாண்டு 1118, ஹிஜிரா 1362

இங்கிலீஷ் 1943ஞு மேமீ—1943ஞு ஜூன்மீ

| வைகாசி | மேமீ | வாரம். | திதி. | நக்ஷத்ரம் | யோகம். | விசேஷங்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1 | 15 | சனி | ஏ55-47 | உத்41-25 | மர60 | சர்வத்ர ஏகாதசி |
| 2 | 16 | ஞா | து56-24 | அ43-48 | அ43-48சி | துவாதசி [ஷ்டை |
| 3 | 17 | திங் | திர55-04 | சித்45-03 | மி45-03அ | பிரதோஷம், ஸ்தம்பப் பிரதி |
| 4 | 18 | செவ் | சசி54-07 | சு45-36 | சி45-36அ | ஸ்ரீ நரஸிம்ஹ ஜயந்தி |
| 5 | 19 | புத | ப◯51-03 | வி43-47 | சித்60 | பௌர்ணமி (பூஜா), ஆகாமாவை, சம்பத் கௌரீ விரதம் |
| 6 | 20 | வியா | பிர46-47 | அ42-02 | சி45-03மி | வைசாக பகுளம் |
| 7 | 21 | வெள் | துதி41-24 | கே39-07 | ம39-07அ | கரிநாள், சுபங்கள் விலக்க |
| 8 | 22 | சனி | திரு36-11 | மூல35-24 | சித்60 | சம்பந்த சுவாமி திருநக்ஷத்திர |
| 9 | 23 | ஞா | சது30-50 | பூ31-13 | சி31-13அ | சங்கட சதுர்த்தி [ம் |
| 10 | 24 | திங் | பஞ்24-12 | உத்27-09 | ம27-09அ | |
| 11 | 25 | செவ் | சஷ்18-07 | திரு23-24 | சித்60 | |
| 12 | 26 | புத | சப்12-06 | அவி19-47 | மி19-47சி | |
| 13 | 27 | வியா | அ6-40 | சத16-12 | ம16-12சி | |
| 14 | 28 | வெள் | நவ1-12<br>தச51-10 | பூர12-37 | சித்60 | |
| 15 | 29 | சனி | ஏ53-26 | உட்10-49 | சி10-49மி | |
| 16 | 30 | ஞா | து51-08 | ரே9-37 | அ9-37சி | |
| 17 | 31 | திங் | திர49-49 | அசு9-30 | சித்60 | பிரதோஷம், கரிநாள் |
| 18 | 1943ஞு ஜூன்மீ 1 | செவ் | சசி50-24 | ப❋10-13 | சித்60 | கிருத்திகை விரதம் |
| 19 | 2 | புத | ●51-37 | கிரு12-37 | அ12-37சி | அமாவாஸ்யை விரதம் |
| 20 | 3 | வியா | பிர54-36 | ரோ16-13 | மர60 | ஜ்யேஷ்ட சுத்தம் |
| 21 | 4 | வெள் | துதி58-12 | மிரு20-23 | சித்60 | சத்திய சந்த தீர்த்தம் |
| 22 | 5 | சனி | திரு60-00 | திரு26-23 | சித்60 | ரம்பா தீர்த்தம், ஸ்ரீ புத்த-கல்கி ஜயந்தி, திருனஸ்பிருக் |
| 23 | 6 | ஞா | ,, 2-21 | புன32-57 | சித்60 | சதுர்த்தி விரதம் [க்ஷத்திரம் |
| 24 | 7 | திங் | சது7-12 | பூச39-34 | சித்60 | சேக்கிழார் சுவாமிகள் திருந |
| 25 | 8 | செவ் | பஞ்12-03 | ஆ45-38 | சித்60 | சஷ்டி விரதம் |
| 26 | 9 | புத | சஷ்16-47 | மக51-11 | சி51-11அ | மருந்து செய்ய |
| 27 | 10 | வியா | சப்22-23 | பூர56-27 | சி56-27ம | ஆராய்ச்சிகள் செய்ய, தூது செல்ல, பகை வெல்ல |
| 28 | 11 | வெள் | அ23-20 | உத்60-00 | சித்60 | திருதினஸ்பிருக் |
| 29 | 12 | சனி | நவ25-13 | ,, 1-16 | மர60 | சுபம் விலக்க |
| 30 | 13 | ஞா | தச26-27 | அ3-04 | அ3-04சித் | பாபஹர தசமி |
| 31 | 14 | திங் | ஏ24-57 | சித்4-14 | மி4-14அ | நிர்ஜல ஏகாதசி |

| | | சூர்-புத<br>சனி | குரு<br>சுக்ர |
|---|---|---|---|
| செ<br>கே | 3-மீன-செ<br>12-கட-குரு<br>17-கட-சுக் | | ராகு |
| | | | |

EDITED, PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
No. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS,

# அயக்காந்த சத்தின் திராவகம்

இந்தத் திவ்ய ஔஷதம், விஷ சுரம் முதலிய எத்தகைய ஜுரத்தினா லும் தேகம் மெலிந்து வெளுத்துப் போனவர்களுக்கும், வேறு பல வியாதி களால் தாக்கப்பட்டுப் பலமற்றுப் போனவர்களுக்கும், தாது விருத்தி நாட் டங்கொண்டு பல மருந்துகளைச் சாப்பிட்டு குணமடையாதவர்களுக்கு இது ஒரு அமிர்தமாகும் என்றே நிச்சயமாகக் கூறுவோம். இம்மருந்தை உட்



கொள்வதால் மல ஜலம் தாராள மாய்க் கழிந்து பசியின்மையைப் போக்கி ஜீர்ண சக்தியைக் கொடுத் துப் பரிசுத்த இரத்தத்தைப் பெருக்கும். தாது விருத்தி உண் டாகும். தேகம் சிவப்படைந்து முகம் வசீகரமாகும்.

இம்மருந்தைச் சாப்பிடுகிறவர் கள் தேக திடத்தைப் பெற்று, வலிவுள்ள மக்களைப் பெறுவார் கள். சகல இன்பங்களையும் அனு பவிக்கலாம். ஆண் பெண் இரு பாலரும் எப்பொழுதும் உபயோகிக்கலாம்.

பெரியவர்கள் ஒரு அவுன்ஸ் தண்ணீர் அல்லது பசும் பாலில் 10, 12 துளி வரையிலும், சிறியவர்கள் 2-முதல் 6, 7 துளிகள் வரையிலும், காலை மாலை இரு வேளையும் சாப்பிடவேண்டும். இதற்கு யாதொரு பத்தியமு மில்லை, எல்லா ஏழைகளும் வாங்கி உபயோகிக்கும்பொருட்டே மிகக் குறைந்த விலைக்கு விற்கிறோம். ஒரு மாதம் சாப்பிடக்கூடிய மருந்தின் விலை அணா 12. தபாற் செலவு வேறு.

**தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.**

---

# ஞானசெல்வாம்பாள்

5-பாகம் சேர்ந்தது
விலை ரூ. 9—10—0.

ஞானம்பாள் செல்வாம்பாள் என்ற இரண்டு சகோதரிகளே இந்த நாவலில் கதாநாயகிகள். இதில் கன்னிகைகள் மேலதிகாரமின்றி தங்கள் பிரியப்படி நடக்குமாறு விடப்படுவது, அன்னிய வாலிபரிடம் தாராளமாய்ப் பழகும்படி விடப்படுவதே நல்ல நாகரீகமென்று கருதுவது முதலிய ஆசாரங் களால் விளையும் தீங்குகள் அனுபவமாய் விளக்கப்பட் டிருக்கின்றன. இக் கதா நாயகிகளின் நடக்கைகளால் அச்சம் மடம் நாணம் பயிர்ப்பு என்னும் குணங்களைக் கைவிடாமல் நன்னெறியில் ஒழுகும் கன்னிகை நல்ல பலன் களை அடைவா ளென்பதும் அற்ப போகங்களிலும் படாடோப வாழ்க்கையி லும் இச்சை வைப்பவள் துன்பத்தையே யடைவாளென்பதும் நிரூபிக்கும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1-ம் பாகம் விலை ரூ. | 2-0-0 | 3-ம் பாகம் விலை ரூ. | 2-0-0 | 5-ம் பாகம் விலை | |
| 2-ம் ,, | 2-0-0 | 4-ம் ,, | 2-0-0 | ரூ. 1-10-0 | |

# இல்லற இன்ப விஜயம்

விலை ரூ. 1-8-0

இஃதோர் அருமையான தமிழ்ப் புத்தகம். இதைப் படித்து ஆண் பெண் கள் அனுபவிக்கத் தக்க இன்ப வகைகள் அனைத்தையும் பிரத்தியக்ஷமாகக் கண்டு பேரானந்தத்தை அடையலாம். அநேக படங்களுடன் கூடியது.

---

**ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.**

# காப் கியூர் என்னும் க்ஷய அரி



கப இருமல், இரைப்பு அல்லது மந்தகாசம், க்ஷயம், சளி, இருமல், கக்குவாய் இருமல், பெருத்த இருமல், தொண்டை நோய், சுவாசகாசம், கடினமான ஜலதோஷம், அபாயமான ஈழை இருமல், தொண்டை எரிச்சல், தொண்டைக் கரகரப்பு, இருமலினால் தூக்கம் பிடியாமை, குளிர்ச்சியான வஸ்துவைச் சாப்பிடுகிறதினாலும் பனியில் நனைவதினாலும் உண்டாகும் சாதாரண இருமல் முதலான வியாதிகளை நாலு தினத்தில் இது கண்டித்துக் கோழையை வெளியில் தள்ளி நன்றாய் அவ்வியாதி கொண்டிருந்தவரை தூங்கச் செய்யும்.

புட்டி 1-க்கு விலை ரூபா 1.

## ஜி. கியூர்

### இது 3-தினத்தில் குணப்படுத்தும்

மேக உஷ்ணத்தால் நாது கெட மூலத்தில் அக்னி அதிகரிப்பதனால் கள்ளநோய், நீரடைப்பு, சதையடைப்பு, பவுத்திரம், அரையாப்பு முதலியன இந்த நோயின் மூலமாய் ஏற்படும். நீர்க்கடுப்பும், குத்தலும், எரிச்சலும் காண்பதுண்டு. இவைகளை நீக்கி நல்ல சுகத்தைக் கொடுக்கக் கூடிய அநுபவ மருந்து இது. பத்தியம் கிடையாது. இதனை உபயோகிக்கும் விவரம் மருந்துடன் அனுப்பப்படும்.

புட்டி 1-க்கு விலை ரூபா 1. தபாற்கூலி வேறு.

## மயிர் போக்கும் சோப்



இது ஒவ்வொருவருக்கும் மிகவும் அத்தியாவசியமானது. சரீரத்தில் எந்தப் பாகத்திலுமுள்ள மயிரை இந்த சோப்பின் உதவியால் பிரயாசையின்றி வெகு சுலபமாய் போக்கிவிடலாம். மயிரைப் போக்கவேண்டிய இடத்தில் கொஞ்சம் ஜலத்தைப் பூசி, அதன்மேல் இந்த சோப்பைத் தேய்த்து ஐந்து நிமிஷம் கழித்து காகித கார்டினாலாவது, ஓலைத் துண்டினாலாவது வழித்தால் அவ்விடத்திலுள்ள மயிர் யாவும் கழிந்து போகும். அந்த இடம் பிறகு மழமழப்பாக விருக்கும். இந்த சோப்பில் துர்நாற்றம் முதலியவை இரா.

3-சோப் கொண்ட பாக் 1-க்கு விலை ரூபா 1.

## மயிர் போக்கும் சூரணம்

இந்த சூரணத்தை ஜலத்தில் கலந்து, மயிர் போக்கவேண்டிய யிடத்தில் தடவி உலர்ந்த பின் உடனே 5-நிமிஷம் பொறுத்து கழுவினால் மயிர் போய்விடும்.

புட்டி 1-க்கு விலை அணா 8.

தனலட்சுமிகம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.

# சர்வதேள் விஷ சஞ்சீவினி.

(ரிஜிஸ்டர் டிரேட் மார்க்)

**பட்டவுடனே விஷம் பறக்கும்! அழுதவன் சிரிப்பான்!!**

**இதில் குணமில்லையென்று நிரூபிப்பவர்களுக்கு 100-ரூபாய் இனாம்.**




நமது நாட்டிற்கு இது அவசியமாய் ஒவ்வொரு குடும்பத்திலும் சதா கையிருப்பில் இருக்கவேண்டிய ஓர் ஔஷதமாகும். இது ஆங்கில யூனானி தமிழ் வைத்திய நிபுணர்களால் நன்கு மதிக்கப்பட்டுள்ளது. இதை நாள்பட வைத்திருப்பதால் இதன்குணம் சற்றும் குறையாது. தேள், நட்டுவாய்க்காலி, செய்யான், பாம்பு, எலி முதலியவற்றின் விஷங்களை இரண்டொரு நிமிஷங்களில் இது அடியோடு நீக்கக்கூடியது. எண்ணிறந்தோர் இதனால் சுகமடைந்திருப்பது பிரத்தியக்ஷ அனுபவமானதால் இதைப்பற்றி நாம் அதிகம் கூறவேண்டியதில்லை. இது இரண்டுவித மருந்துகள் அடங்கியது. இதை உபயோகிக்கும் முறை மருந்தோடு அனுப்பப்படும்.

விலை:—இரண்டுவித மருந்தும் அடங்கிய பாக்கெட் 1-க்கு அணா 8. தபாற் கூலி அணா 4. டஜன் 1-க்கு விலை ரூபா 5.

**ஏககாலத்தில் 3-பாக்கெட் வாங்குவோருக்குத் தபாற்கூலி இனாம்,**
**வியாபாரிகளுக்கு 100-க்கு 25 கமிஷன் கொடுக்கப்படும்.**

# மேஹ ராஜ சஞ்சீவி எண்ணெய்



இந்த எண்ணெயை ஒருமுறை மூன்றுநாள் சாப்பிட்ட மாத்திரத்திலேயே, கிரந்தி. மேக தாமரை, மேக நமைச்சல், மேக இரணம்; மேகப் புண், கால் கைகளிலே சேரும் மேக துர்நீர், மேக வெடிப்பு, எல்லா வகைகளான வெள்ளை, மூத்திரக் கருவியிலே தோன்றும் பலவித வியாதிகள் தீரும். அநேக காலமாக இருக்கும் வியாதிகளுக்கு ஒருமுறை சாப்பிட்டு, 15 நாள் பொறுத்து, மற்றொருமுறை சாப்பிடவேண்டும்.

3-நாள் எண்ணெய், புட்டி 1-க்கு ரூபா 1—8—0; மருந்து ஆர்டர் செய்யும்போது வியாதியின் பூரண நிலவரத்தை தெரியப்படுத்தவும்.

# சுகபேதி மாத்திரை

இந்த மாத்திரையில் 2-முதல் 5-வரை திரேக திடமறிந்து மாத்திரையைச் சாப்பிட்டு கொஞ்சம் ஜலம் சாப்பிடவும். இவ்விதம் சாப்பிட்டால் சுகமாய் பேதியாகிவிடும். மாத்திரையை அனுப்பும்பொழுது உபயோகிக்கும் முறை தெரிந்துகொள்ளலாம்.

25-மாத்திரை அடங்கிய புட்டி 1-க்கு விலை அணா 6.

---

**தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.**

# நூதன தமிழ் நாவல்களும் கதைப் புத்தகங்களும்

ஆரணி-குப்புசாமி முதலியார் இயற்றியவை

| | ரூ. | அ. |
|---|---|---|
| ஞானசெல்வாம்பாள் 5-பாகம் | 9 | 10 |
| கற்பகச் சோலையின் அற்புதக் கொலை ... | 1 | 4 |
| கடற்கொள்ளைக்காரன் 2பாகம் | 3 | 4 |
| மதனம்மாள் 2-பாகம் ... | 3 | 0 |
| லோகநாயகி ... | 1 | 0 |
| விளையாட்டுச் சாமான் ... | 1 | 6 |
| பவளத்தீவு 2-பாகங்கள் ... | 3 | 0 |
| தபால்கொள்ளைக்காரர்கள் ... | 0 | 14 |
| அமராவதி 2-பாகங்கள் ... | 4 | 0 |
| மஞ்சள் அறையின் மர்மம் ... | 1 | 8 |
| கற்கோட்டை ... | 2 | 0 |
| பூங்கோதை ... | 0 | 10 |
| வீரநாதன் ... | 0 | 12 |
| கனகபூஷணம் 2-பாகமும் ... | 3 | 8 |
| கமலசேகரன் ... | 1 | 12 |
| தினகரசுந்தரி ... | 1 | 0 |
| ரத்தினபுரிரகசியம் 9-பாகமும் | 18 | 2 |
| சந்திராபாய் ... | 2 | 0 |
| இராஜாமணி ... | 2 | 0 |
| இரத்தினபாய் ... | 1 | 12 |
| மதனபூஷணம் ... | 1 | 0 |
| சுவர்ணம்பாள் ... | 0 | 12 |
| தேவசுந்தரி ... | 1 | 4 |
| குணசுந்தரன் ... | 0 | 12 |
| பத்மாஸனி ... | 0 | 14 |
| ஆனந்தஸிங் ... | 2 | 0 |
| மின்சார மாயவன் ... | 1 | 8 |
| ஆனந்தசிங்கின் அஷ்டஜயங்கள் | 1 | 12 |
| அரசூர் இலக்ஷ்மணன் ... | 2 | 0 |
| கைவல்லிய நவநீத வசனம் ... | 1 | 8 |
| சகோதரவாஞ்சை ... | 0 | 7 |

---

| | ரூ. | அ. |
|---|---|---|
| தத்வசங்க்ரஹ ராமாயணம் ... | 4 | 0 |
| ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சருடைய சரித்திரமும் உபதேசங்களும் | 1 | 12 |
| விவேகானந்தர் ... | 4 | 0 |
| தமிழ் மெடீரியா மெடிகா ... | 3 | 0 |
| மாதவி மாதவன் 2-பாகம் ... | 2 | 0 |
| மலையாள பகவதி ... | 1 | 0 |
| அற்புத நவநீத ரம்பை ... | 1 | 0 |
| [illegible] விகட [illegible] விநோதம் | 0 | 10 |
| [illegible] டி கிரீத்[illegible] ... | 0 | 12 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| துயராளன் கதை ... | 0 | 12 |
| பூலோக லக்ஷ்மி கதை ... | 0 | 10 |
| கனகரத்தினம் ... | 0 | 8 |
| கண்டிராஜா நாடகம் ... | 0 | 12 |
| நளின சுந்தரி ... | 0 | 10 |
| கம்பராமாயணவசனசங்கிரகம் | 2 | 0 |
| குசேலோபாக்கியான வசனம் | 1 | 0 |
| ஸ்ரீபாலன் ... | 0 | 8 |
| உதயணன் ... | 0 | 7 |
| தசக்கிரீவன் ... | 0 | 14 |
| போஜ சரித்திரம் ... | 0 | 5 |
| சதானந்தர் ... | 1 | 4 |
| ஜீவகன் வசனம் ... | 1 | 0 |
| கர்ணன் சரிதை ... | 0 | 12 |
| பீஷ்ம விஜயம் ... | 0 | 10 |
| கீர்த்திசிங்கன் ... | 0 | 8 |
| முப்பெருந்தாசர் ... | 0 | 10 |
| அரிச்சந்திரன் சரிதை ... | 0 | 8 |
| நீலக்கொடி ... | 0 | 5 |
| மணவாளன் ... | 0 | 3 |
| பரசுராமன் ... | 0 | 3 |
| சிசுபாலன் ... | 0 | 8 |
| அங்கதன் ... | 0 | 4 |
| தசாவதாரம் ... | 0 | 6 |
| கிருஷ்ணன் தூது வசனம் ... | 0 | 8 |
| சண்டோபாக்யானம் ... | 0 | 6 |
| கருணைகரரும் சத்தியசீலரும் | 0 | 8 |
| சத்தியவசனி ... | 0 | 4 |
| விமலன் ... | 0 | 4 |
| கண்ணபிரான் ... | 0 | 4 |
| செய்யுட்பாடத்திரட்டு ... | 0 | 4 |
| நாலுமந்திரி கதை ... | 0 | 4 |
| மங்களேசுவரன் ... | 0 | 6 |
| தக்கன் ... | 0 | 6 |
| சீமந்தனி ... | 0 | 8 |
| நான்குகோடி ... | 0 | 4 |
| மதிமோசவிளக்கம் ... | 1 | 0 |
| மெய்க்காதலி ... | 0 | 8 |
| மேனமினுக்கி கதை ... | 0 | 8 |
| வீணைகானன் ஞானேந்திரி ... | 0 | 8 |
| மனோன்மணி கதை ... | 0 | 8 |
| கோமளவல்லி கதை ... | 0 | 8 |
| விகடவல்லி கதை ... | 0 | 6 |
| தாலிகட்ட மறந்த கதை ... | 0 | 5 |

**இந்[illegible] க[illegible]சமென்னும் சர்வ தேவதா வசியம்**

முதல் பாகமும் இ[illegible]ண்டாம் பாகமும் சேர்ந்தது. **விலை ரூபா 1.**

**ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.**

# சர்வமேக நிவாரணத் தைலம்




இந்தப் பிரசித்திபெற்ற இராஜ சஞ்சீவி திராவகத்தை, காலை மாலை இரண்டு வேளைகளிலும் 10-நாட்கள் வரை உட்கொண்டால் வெகு நாட்களாகத் தேகத்தில் ஊறிய மேக ரோகங்கள்; மேக வாயு, தனுர்வாதம், முழங்கால் வாதம், குதிகால் வாதம், சகலமான தடிப்புகள், மேகரோகத்தால் உண்டான வெடிப்பு இரணங்கள், குழிப் புண்கள், புரையோடுகிற புண்கள், திமிர் வாய்வு, கைகால் விரல்களில் மேகநீர் தங்கிய நோய்கள், கிரந்தி முதலிய கிரந்திப் புண்கள், துடைவாழை படைகள், நகக்கணுநோய், சகல மூலங்கள் முதலிய ரோகங்கள், நெருப்பிலிட்ட பஞ்சு போல் போகும். இது அநேக ஜனங்களின் துன்பத்தை நீக்கிச் சௌக்கியத்தை உண்டு பண்ணி அதிக அனுபவத்திற்கு வந்தது. கடின பத்தியமின்றி, பால், நெய், கறி முதலியவைகளுடன் சாப்பிடக்கூடியதும், தேக இளைப்பு, ஆயாசம் முதலியவைகளை உண்டாக்காமல் சுகமாக்கி வியாதிகளைக் கண்டித்துச் சுகப்படுத்தக்கூடியதுமாகிய உண்மையான மருந்து.

இதன் விலை ரூபா 1—8—0. தபாற்கூலி வேறு.

# எலிக்ஸைரன்

மேகரோக நிவாரணி!
தாது விருத்திக்கு நிகரற்றது!!

மலையாள அஷ்டாங்க முறைப்படி மலையாளத்தில் தயார் செய்தது.

பத்தியம் கிடையாது. ருசிகரமானது. இரத்த சுத்திக்கும் இரத்த விருத்திக்கும், தசை விருத்திக்கும், தாது பலத்திற்கும் இது ஒரு அமிர்த சஞ்சீவியாகும். நாள்பட்ட வெள்ளை, வெட்டை, மேகவியாதி, துர்நீர், மூலச்சூடு, நரம்புத் தளர்ச்சி, வீரியக் குறைவு, லிங்கப்புண், லிங்கப் புற்று, மேகப்படைகள், உடம்பு ஊரல், அஜீரணம், மலச்சிக்கல், கைகால் நோவு, மயக்கம், இடுப்பு வலி, மூத்திரநோய் முதலிய எல்லாவிதமான மேக வியாதிகளைப் போக்கி, புத்துயிர் அளித்து இல்லற இன்பத்தை அனுபவிக்கச் செய்து, யௌவனத்தைத் தரும். ஆண் பெண் யாவரும் சாப்பிடலாம்.

**20-நாள் மருந்து 40-வேளைக்கு (பூரண குணத்துக்குப் போதுமானது) ரூபா 2-0-0**

# ஜீவா

ஸ்டமக் பவுடர்:
ஆபரேஷன் தேவையில்லை:

சகலவித வயிற்றுவலியையும் **Appendicitis** என்னும் வயிற்றிலுண்டாகும் வியாதியையும், புண்களையும், வயிற்றை ஆபரேஷன் செய்யாமல் இம்மருந்து உத்தரவாதத்துடன் குணப்படுத்தும். இம்மருந்து மலையாள அஷ்டாங்க முறைப்படி தயார் செய்தது. (அல்சர்), அஜீரணம், மலபந்தம், குடலிரைச்சல், புளியேப்பம், வயிற்றுக்குத்தல், குடல்புண், ரணம், சதை வளர்தல், குலைக்கட்டி, ஈரலில் சதை வளருதல், குன்மம், சாப்பிடும் முன்னும் பின்னும் வயிற்றில் உண்டாகும் வலி இன்னும் பலவிதமான வியாதிகளையும் குணப்படுத்தும். **30-நாள் 60-வேளை மருந்து விலை ரூபா 2-8-0**

---

**தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.**

Edited, Printed and Published by N. MUNISAMI MUDALIAR, at the "ANANDA BODHINI PRESS" No. 6, Lawyer Chinnathambi Mudali Street, Sowcarpet, Madras.